# PERFECT GIFT FOR YOUNG ONES
## ( YOUNG AT HEART AS WELL! )

**The most precious gift is the gift of reading: This festive season, gift an annual subscription of Chandamama to someone you love!**

**Inculcate the reading habit! Develop good moral values! Know about our rich cultural Heritage.**

**An ideal read for people from 8 to 80.**




**Attractive Festive Offer!**

**At Rs 150 only (English Edition) you Pay Less and Get More!**

**Offer closes on January 31, 2004.**

*Mail the form along with the remittance to :*
Subscription division, Chandamama India Limited, 82, Defence Officers' Colony, Ekkatuthangal, Chennai - 600 097.

## SUBSCRIPTION FORM






*Please enrol me as a subscriber of* **Chandamama**. *I give below the required particulars:*

Name : ..........................................................................

Address : ..........................................................................

..........................................................................

PIN Code : .................................. I am remitting the amount of Rs.150/- for 12 issues by Money Order/Demand Draft/Cheque No. .............................. Bank .............................. (branch) drawn in favour of Chandamama India Ltd., encashable at Chennai (outstation cheque to include Rs.25/- towards Bank Commission).

Place : ....................

Date : ....................

**Note : If you would like to gift to more than one person, please photocopy the subscription form and send it to us.**

Signature

அம்புலிமாமா

சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 107 நவம்பர் : 2003 புன்னகை : 9



மர்மக்குளம் 9



நவீன வேதாளக் கதை 15



இந்தியப் புராதனக் கதைகள் 21



விநாயகர் 77



## பொருளடக்கம்

★ கஜேந்திரனின் கட்டளை ...7 ★ மர்மக் குளம்-21 ...9 ★ மணிகண்டனின் மனம் (நவீன வேதாளக் கதை) ...15 ★ இந்தியாவின் இன்முகம் ...20 ★ நேர்முக எதிர்ப்பு (இந்தியப் புராதனக் கதைகள்) ...21 ★ குள்ள ராட்சஸியின் உள்ளம் ...24 ★ ஆத்திகனும் நாத்திகனும் ...29 ★ செய்திகளில் இடம்பெற்ற குழந்தைகள் ...30 ★ கல்லும் உருகியது ...31 ★ படிப்பினை ...34 ★ இளவரசியும், தங்க வண்ணப் பறவையும் ...36 ★ சிலிகா ஏரி ...39 ★ இருட்டிலிருந்து வெளிச்சத்திற்கு ...59 ★ சிறப்பான பிறந்தநாள் விழா ...60 ★ சுதந்திரத்தின் மதிப்பு ...62 ★ உயிருள்ள பொருள்கள் ...64 ★ முன்கோபியின் முகமலர்ச்சி ...67 ★ அபூர்வ அன்பளிப்பு (கஷ்மீர் மாநில நாட்டுப்புறக் கதை) ...70 ★ நம் இந்தியா (வினாக்கள்) ...76 ★ விநாயகர்-23 ...77 ★ நண்பர்கள் பலவிதம் ...83 ★ உண்மைக்காக ...87 ★ சூர்யா-4 ...88 ★ கேளிக்கை நேரம் ...92 ★ போட்டோ வாக்கியப் போட்டி ...94

SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
to

Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.120/- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத் தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# நேர்முக எதிர்ப்புகள் - அன்றும்இன்றும்

நேர்முக எதிர்ப்புகள் பற்றி ஒரு கதை இந்த இதழில் வெளியாகியுள்ளது. அதைப் படித்துவிட்டு இத்தலையங்கத்தைப் படித்து சிந்தியுங்கள். ஒரு குறுகிய பாதையில் இரு மன்னர்கள் தம் ரதங்களில் எதிரும்புதிருமாக வந்தார்கள். அவர்களில் ஒருவர் ஒதுங்கி மற்றவருக்கு வழிவிட்டால் தான் இருவரும் தம் பயணங்களைத் தொடர முடியும். அதை அவர்கள் செய்தார்கள். இது 2500 வருடங்களுக்கு முந்தைய புத்தரின் ஜாதகக் கதைகளில் ஒன்றாகும்.

இன்று இதுபோன்ற ஒரு நிலை அண்மையில் ஏற்பட்டது. அரசாங்கத்தின் இரு துறைகளைச் சேர்ந்த அதிகாரிகள் தம் வாகனங்களில் எதிரும்புதிருமாக ஒரு குறுகிய பாலத்தின் மீது வந்து தம் வண்டிகளை நிறுத்திவிட்டார்கள். யார் யாருக்கு வழி விடுவது? இது விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையால் நடக்க வேண்டும். ஆனால் இரு துறை அதிகாரிகளும் ஒருவர் மற்றவருக்கு வழிவிடால் வழியை மறித்துக் கொண்டு நின்றார்கள். தகராறு முற்றியது. ஒரு துறையின் அதிகாரிகள் மற்ற துறையின் அதிகாரியை அடக்கிப் பிடித்துக் கொண்டு போனார்கள். மற்ற துறை அதிகாரிகள் போலீசாரிடம் தம் அதிகாரியை எதிர்த் துறையினர் கடத்திக் கொண்டு போய்விட்டதாகப் புகார் கொடுத்தார்கள்.

இதற்குப் பின் என்ன நடந்தது என்று நாம் கூறிக் கொண்டிருக்க வேண்டாம். அந்த இரு துறை அதிகாரிகளையும் உயர்மட்ட அதிகாரிகள் தலையிட்டு சமாதானப்படுத்தி இருப்பார்கள். நாம் தற்போது பொறுமையைக் கடைப்பிடிப்பதிலும் நற்பண்புகளோடு செயல்படுவதிலும் எப்படித் தான் வீழ்ந்துவிட்டோம் என்பதைக் காண முடிகிறது. ஜாதகக் கதை நிகழ்ச்சிக்கும் இந்நிகழ்ச்சிக்கும் எவ்வளவு வித்தியாசம்! இதுபற்றிச் சிந்தித்துத் திருந்த வேண்டும்.

ஆசிரியர் : விஸ்வம்

Visit us at : http://www.chandamama.org






# எரிவாயு சிக்கனம்

விடுமுறைக்காக வீணா தனது அத்தை வீட்டுக்கு சென்றிருந்தாள். ஒருநாள் அத்தை வீட்டில் வீணாவுக்கும், அத்தையின் மகள் சுப்ரியாவுக்கும் நாமே இன்று சமையல் செய்து பார்க்காலாமே என்று தோன்றியது. சாதமும் பருப்பும் குக்கரில் சமைத்து, காய்கறியை இலுப்பைச் சட்டியில் வதக்கி விடலாம் எனத் தீர்மானித்து பாத்திரங்களை எரிவாயு (GAS) அடுப்பில் வைத்து, அடுப்பைப் பற்ற வைக்க முயன்றனர்.



இதைக் கண்ட அத்தை குறுக்கிட்டாள். ''சமையலுக்கு வேண்டிய பொருட்களை தயார் நிலையில் வைக்காமல், அதற்குள் ஏன் அடுப்பைப் பற்ற வைக்கிறீர்கள்? இதனால் எவ்வளவு எரிவாயு வீணாக செலவாகும் தெரியுமா? முதலில் அரிசி, பருப்பு ஆகியவற்றை நீரில் சுத்தப்படுத்தி ஊற வைக்க வேண்டும். காய்கறியை நறுக்கித் தயார் செய்து கொள்ள வேண்டும். பிறகே அடுப்புப் பற்ற வைக்க வேண்டும்.

இப்படிசெய்வதால், நிறைய எரிவாயு மிச்சமாகும். தவிர குக்கர், மற்ற பாத்திரங்களைவிட நான்கு மடங்கு சீக்கிரமாக சமைக்கும். ஆகவே காய்கறியை குக்கரில் வேகவைத்து பிறகு எண்ணெயில் வதக்கினால் இன்னும் நிறைய எரிவாயு மிச்சமாகும். இதே போல் குளிர்சாதனப்பெட்டி (FRIDGE)யிலிருந்து வெளியே எடுக்கப்பட்ட பொருட்களை சற்று வெளியே வைத்து குளிர்ச்சியைப் போக்க வேண்டும். இதனாலும் எரிவாயு மிச்சமாகும். நீங்கள் நாளைய குடும்பத்தலைவிகள். நீங்கள் இப்போதிருந்தே சமையல் அறையில் ஒவ்வொரு வேலையிலும் எரிவாயு சிக்கனப்படுத்தும் முறைகளை அறிந்து பொறுப்புடன் செயல்பட்டால், உங்கள் குடும்பத்திற்கும் நாட்டுக்கும் நல்லது. ஏனெனில் எரிவாயுவை வீணாக்கக் கூடாது'' என்று அத்தை புத்திமதி சொன்னாள். வீணாவும், சுப்ரியாவும் இவ்வாறு பல உபயோகமான விஷயங்களைக் கற்றுக் கொண்டார்கள்.



# கஜேந்திரனின் கட்டளை

**மா**பெரும் கடலின் நடுவிலிருந்த ஒரு தீவின் காட்டுப் பகுதியில் பல கொடிய மிருகங்களும் சாதுவான மிருகங்களும் இருந்தன. இந்த மிருகங்களின் மன்னன் கஜேந்திரன் என்ற யானை. இதன் சொல்லிற்கு எல்லா மிருகங்களும் கட்டுப்பட்டு வந்தன.

கஜேந்திரன் பலசாலி. கூரறிவு கொண்டது. அதன் தீர்ப்பு நடுநிலை தவறாமல் இருந்து வந்தது. அந்தத் தீவைச் சுற்றியுள்ள கடலில் ஒரு நீர் வாழ் நங்கை இருந்தாள். இடுப்பிற்குக் கீழ் அவளது உடல் மீன் போலவும் இடுப்பிற்கு மேலுள்ள பகுதி மனித உடல் போலவும் இருந்தது. அவள் கடலில் நீந்தியும் கரைக்கு வந்து காட்டு மிருகங்களுடன் அன்புடனும் பரிவோடும் பழகி வந்தாள்.

ஒருநாள் மாலையில் கடற்கரையில் மிருகங்கள் கூட கஜேந்திரனிடம் தம் குறைகளைச் சொல்லிக் கொண்டிருந்தன. அப்போது இரு ஓநாய்கள் காயப்பட்டு ரத்தம் சொட்டும் ஒரு ஆட்டுக் குட்டியோடு அங்கு வந்து கஜேந்திரனின் முன் நின்றன. கஜேந்திரன் ஆட்டுக் குட்டியைப் பரிவுடன் பார்த்தவாறே ஓநாய்களிடம் ''உங்களிடையே என்ன தகராறு?'' என்று கேட்டது.

அப்போது சற்று கருப்பாக இருந்த ஓநாய், ''அரசே! இதை நான் வேட்டையாடினேன். அதனால் இது எனக்கே சேர வேண்டும்,'' என்றது. அப்போது பழுப்பு நிற மற்ற ஓநாய் ''இது எனக்கே சேர வேண்டும். ஆட்டு மந்தையிலிருந்து பிரித்து தனியாக நான் தான் இதைக் கொண்டு வந்தேன். அப்போது இந்த ஓநாய் திடீரென இதன் மீது பாய்ந்து காயப்படுத்திவிட்டு இது தன்னுடையது என்று கூறுகிறது,'' என்றது.

கஜேந்திரன் இரு ஓநாய்களையும் கடுமையாகக் கடிந்துகொண்டு பழுப்பு நிற ஓநாயிடம் ''நீ ஆட்டுக்

- கி.அருணா -

குட்டியை நயவஞ்சகமாக மந்தையிலிருந்து பிரித்துக் கொண்டு வந்ததே பெரும் குற்றம். அதனால் நீ ஒரு வார காலத்திற்கு இருட்டு குகைக்குள் சிறைப்பட்டுக் கிடக்க வேண்டும்,'' என்றது.

அதன் பின் அது கருப்பு ஓநாயிடம் ''நீ அந்த ஓநாய் ஓட்டி வந்த ஆட்டுக் குட்டியின் மீது பாய்ந்தது தவறு. அதனால் நீ இந்த ஆட்டுக் குட்டியை அதன் மந்தையிலேயே கொண்டு போய் விட்டுவிட்டு வந்துவிட வேண்டும். இதைச் செய்யத் தவறினால் நீ வாழ்நாள் முழுவதும் சிறையில் அடைபட்டுக் கிடக்க வேண்டி வரும்,'' என்றது.

இப்படி நடந்ததை எல்லாம் நீர் நங்கை நின்று பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு அவள் கஜேந்திரனின் முன்போய் நின்று ''கஜேந்திரா! உங்கள் தீர்ப்பை மிருகங்கள் ஏற்றுக் கொள்வது கண்டு மகிழ்கிறேன். ஆனாலும் எனக்கு ஒரு சந்தேகம். இரு ஓநாய்களும் ஆட்டுக்குட்டி தனக்கே எனக் கூறியும் அதை ஏற்காமல் குட்டியை மந்தையில் கொண்டு போய்விடச் சொன்னீர்களே. அது ஏன்? மிருகங்கள் வேட்டையாடித் தானே தம் உணவை அடைய வேண்டும்?'' என்றது.

கஜேந்திரனும் ''காட்டு மிருகங்கள் வேட்டையாடத் தான் வேண்டி இருக்கிறது. ஆனால் வேட்டையாடுவது காட்டிற்குள் மட்டுமே இருக்க வேண்டும். காட்டுக்கு வெளியே ஊர்களுக்குள் போய் வேட்டையாடக் கூடாது. அப்படிச் செய்தால் ஊர் மக்கள் காட்டு மிருகங்களைத் துன்புறுத்துவார்கள். அதனால் காட்டில் வாழும் மிருகங்களுக்குப் பல புதிய பிரச்சினைகளை எதிர்நோக்க வேண்டி வரும். நாம் நம் எல்லைக் கோட்டைத் தாண்டக் கூடாது. இது என் கட்டளை. இதை எந்த மிருகமும் மீறக் கூடாது. மீறினால் இந்த இரு ஓநாய்களுக்கு அளிக்கப்பட்ட தண்டனை போலத்தான் கிடைக்கும்,'' என்றது.

நீர் நங்கையும் ''ஆகா! உன் அறிவை மிகவும் பாராட்டுகிறேன்,'' என்று கூறி அதனை வணங்கிவிட்டு கடலுக்குள் சென்றாள்.





# மர்மக் குளம்

## 21

*(மர்மக் குளத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த மங்களவர்மன். ஒரு மரத்தின் கிளைகளில் அகப்பட்டுக் கொண்ட அன்ன ரதத்தை ஓட்டுபவனைக் கண்டான். அவனது அலறலைக் கேட்டு சித்தசாதகனும் கனகாட்சனும் அங்கு வந்தார்கள். அப்போது ஜல ராட்சஸர்களை நீர் யானை மீதிருந்த ஒருவன் துரத்திக் கொண்டு வரவே மனிதக் குரங்கு அவன் மீது பாய்ந்தது. அப்போது - )*

ஜலராட்சஸர்கள் தம் தலை வனுக்கு ஆபத்து வந்தது கண்டு கும்பலாக ஓடி மனிதக் குரங்கைத் தம் கல்கதை களால் தாக்கலானார்கள்.

அதுகண்டு சித்தசாதகன் தன் ஈட்டி யைச் சுழற்றிக் கொண்டு அவர்களைத் தாக்கலானான். இவ்வாறு அங்கே ஒரு பயங்கரப் போர் நிகழ்ந்தது. பல கதை களின் அடிகளைத் தாங்க முடியாமல் மனிதக் குரங்கு சுருண்டு விழுந்து விட்டது.

அப்போது தன்னைச் சூழ்ந்து நின்ற வீரர்களைப் பார்த்து ஜல ராட்சஸர்க்களின் தலைவன் ''ஏய் மானிடப் பதர்களே! நான் யார் தெரியுமா? மர்மக்குளத்தை ஆளும் அதிபதி. நான் இப்போது அங்கே போய் பத்மமுகியை மட்டும் ஒன்றும் செய்யாமல் மற்றவர்களை எல்லாம் என் கல்கதையாலேயே அடித்துக் கொல்லப் போகிறேன்,'' என்றான்.



அப்போது கீழே விழுந்த மனிதக் குரங்கு தன் கைகளையும் கால்களையும் ஆட்டிக் கொண்டு எழுந்திருக்க முயன்றது.

அதைக் கண்ட சித்தசாதகன் அதற்கு உதவ நினைத்துத் தன் கட்டுப்பாட்டில் இருந்த ஜல ராட்சஸனிடம் ''நீ இப்போது என்ன செய்ய வேண்டும் தெரியுமா?'' என்று கேட்டான். சித்தசாதகனும் ''அதோ பார்! என் வாகனமான மனிதக் குரங்கு எழுந்து நிற்க முயல்கிறது. நீபோய் அதைத் தூக்கி நிறுத்து!'' என்றான்.

ஜலராட்சஸனும் மனிதக் குரங்கின் பக்கம் போய் அதைத் தூக்கத் தன் கைகளை நீட்டினான். மனிதக் குரங்கோ சட்டென எழுந்து அந்த ஜல ராட்சஸனை உயரத் தூக்கி எறிந்தது. அவன் கனகாட்ச மன்னனின் வீரர்களிடையே விழுந்தான்.

அப்போது மனிதக் குரங்கு பாய்ந்து அந்த ஜல ராட்சஸனைத் தாக்கப் போயிற்று. அப்போது சித்த சாதகன் தன் ஈட்டியை ஆட்டி ''குரங்கே! அவன் என் பணியாள் என்பதை மறந்துவிட்டாயா? என் பணியாட்கள் தமக்குள் சண்டை போட்டுக் கொள்ளக் கூடாது,'' என்று கூறி அதனைக் கட்டுப்படுத்தினான்.

அப்போது ஜல ராட்சஸர்களின் தலைவன் ''என்னிடம் அகப்பட்டுக் கொள்ள இருந்தவன் தப்பி ஓடி விட்டானே அவன் மர்மக் குளத்திற்கு விரைவில் போய்ச் சேர்ந்து விடுவானோ?'' என்று படபடப்புடன் கேட்டான்.

அப்போது வைத்தியதேவன் என்று போற்றப்படும் தேவசர்மா, ''சாதகா! கவலைப்படாதே. மர்மக் குளம் அருகில் தான் உள்ளது. எல்லோரும் என்னுடன் வாருங்கள். அங்கு போய்ச் சேர்வோம்!'' என்றான். சித்தசாதகனும் ''சரி, எல்லோரும் போகலாம்!'' எனவே, தேவசர்மா வழிகாட்ட மற்றவர்கள் அவன் பின்னாலேயே சென்றார்கள்.

தேவசர்மாவின் பக்கத்தில் நடந்து சென்று கொண்டிருந்த மன்னன் கனகராட்சஸன் அவனிடம் ''சர்மா! அந்த ஜல ராட்சஸன் பத்மமுகி என்ற பெண்ணை மட்டும் விட்டு விட்டு மற்றவர்களைத் தாக்கி ஒழிப்பதாகக் கூறினானே. அதற்கு ஏதாவது காரணம் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

தேவசர்மாவும் ''அரசே! பத்மமுகி மர்மக்குள மகேஸ்வரனின் மகள்.

அந்த ஜலராட்சஸத் தலைவன் அவளைத் தன் மகனுக்குத் திருமணம் செய்து வைக்க விரும்புகிறான். இதுதான் விஷயம்,'' என்றான்.

அதுகேட்டு கனகாட்சன், ''அப்படியா! இதைப் போல என் மகள் காஞ்சனமாலையை யாராவது ஒரு ஜல ராட்சஸனுக்கு மணம் செய்து வைத்துவிடுவானோ!'' என்று கவலைப்பட்டான். அப்போது தேவசர்மா,'' நீங்கள் கவலைப்படாதீர்கள். அப்படி எல்லாம் ஒன்றும் நடந்துவிடாது. நமக்கு முன் ஜெயசீலனும் மகேஸ்வரனும் மர்மக் குளத்திற்குப் போயிருக்கிறார்கள்,'' என்றான்.

தேவசர்மா கனகாட்சனுக்கு இவ்வாறு ஆறுதல் கூறிக் கொண்டிருக்கும் அதே சமயத்தில் ஜெயசீலன் மற்றவர்களுடன் மர்மக் குளத்திற்குப் போய்ச சேர்ந்துவிட்டான். அது பரந்து கிடக்கும் பெரிய ஏரி. அதன் கரையில் காடுகளும் சுற்றிலும் மலைகளும் இருந்தன.

அப்போது ஜெயசீலன் மகேஸ்வரனிடம் ''இதுதான் நீ வசிக்கும் மர்மக் குளமா? காஞ்சனமாலை வேண்டிக் கொண்டதால் நீ என் கழுத்தில் மாட்டிய சுருக்குக் கயிறை அகற்றினாய். அதனால் நாம் இருவரும் நண்பர்கள் தானே?'' என்று கேட்டான்.

மகேஸ்வரனும் தயங்கி காஞ்சனமாலையைப் பார்த்தவாறே எதுவும் கூறாமல் இருந்தான். அப்போது காஞ்சன மாலையே ''ஜெயசீலா! இங்கு விரோதிகள் என்று யாரும் இல்லை. உன் வாள் மந்திர சக்தி



பெற்றுள்ளது என்று மகரகேது தெரிவித்திருக்கிறான். அதைக் கொண்டு நீ ஜலராட்சஸர்களைத் தாக்கி கதறக் கதற விரட்டி அவர் களிடம் சிறைப்பட்டிருக்கும் என் அண்ணன் காஞ்சனவர்மனையும் என் மாமாவான இந்த மகேஸ்வரனின் மகள் பத்மமுகியையும் அவர்களிட மிருந்து சிறை மீட்டு வா!'' என்றாள்.

ஜெயசீலனும் ''நான் ஒருவனே தனியாக நின்று ஜலராட்சஸர்களுடன் போரிட வேண்டுமா? ஆகா. அதையே செய்து காஞ்சனவர்மனை மீட்டு உன் தந்தையிடம் ஒப்படைக்கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த மகேஸ்வரன் மகிழ்ந்து போய் ஜெயசீலனின் கைகளைப் பிடித்துக் கொண்டு ''ஜெயசீலா! நான் காஞ்சனவர்மனையும் காஞ்சனமாலையையும் கடத்திக் கொண்டு வந்ததை



ஒரு குற்றமாக எண்ணாதே! நான் அரசகுமாரனை மட்டும் தூக்கிக் கொண்டு வரும்படி மகரகேதுவிடம் சொல்லி இருந்தேன். ஆனால் அவன் தான் காஞ்சனமாலையயும் சேர்த்துத் தூக்கிக் கொண்டு வந்துவிட்டான்,'' என்றான்.

ஜெயசீலனும், ''அப்படியா? ஆனால் அரசகுமாரனை மட்டும் ஏன் கொண்டு வரச் சொன்னாய்?'' என்று கேட்டான்.

மகேஸ்வரனும், ''என் ஒரே மகளான பத்மமுகியை அவனுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டு நான் இமயத்திற்குப் போய் தவம் செய்வது என்று தீர்மானித்தேன். ஆனால் காஞ்சனவர்மன் பத்மமுகியை மணம் செய்து கொள்ள மறுத்துவிட்டான்,'' என்றான்.

ஜெயசீலன் காஞ்சனமாலையைப் பார்க்கவே, அவள் வேகமாகக் குளத்திற்குப் போய் ஒரு தாமரைத் தண்டைப் பறித்து எடுத்து வந்து அதிலிருந்து சொட்டும் சாறை ஜெயசீலனின் நெற்றியில் திகலமாக வைத்தாள்.

பிறகு அவள் ''மாமா சொன்னது முழுக்கமுழுக்க உண்மையே. மற்றொரு ரகசியத்தைச் சொல்கிறேன். இந்தக் குளத்தின் தாமரைத் தண்டின் சாறு ஒருவர் மீது பட்டால் அவரால் நீரிலும் நிலத்தில் உள்ளது போல இருக்க முடியும்,'' என்றாள்.

ஜெயசீலனும் ''அப்படியா! அதைப் பரீட்சித்துப் பார்க்கிறேன்,'' எனக் கூறிக் கொண்டே மர்மக் குளத்தில் குதித்துவிட்டான். அவன் சட்டெனக் கரைக்கு வருவான் என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவன் சற்று நேரமான பிறகே ஒருவனை இழுத்துக் கொண்டு கரைக்கு வந்தான்.

அவனைப் பார்த்ததும் மகரகேது ஆச்சரியத்துடன் ''இவன் ஜல ராட்சஸர் தலைவனின் மகனல்லவா? இவன் சரியான சமயத்தில் தான் நம்மிடம் அகப்பட்டிருக்கிறான். இவனை வைத்துக் கொண்டு நம் எதிரிகளை மிரட்டிப் பணிய வைக்கலாம்,'' என்றான்.

மகேஸ்வரன் வாளை உருவி அவனது மார்பிற்கு நேராக நீட்டி ''எங்கே உன் தந்தை இருக்கிறான்? சொல், உடனே!'' என மிரட்டினான்.

அவனும் ''அவர் யாரோ ஒரு மன்னனையும் ஒரு காபாலிகனையும் கொன்றுவிட்டு வருவதாகக் கூறி



விட்டு காட்டிற்குள் சென்றார். அதைச் செய்துவிட்டு அவர் இங்கு வந்து உங்களை எல்லாம் கண்ட துண்டமாக வெட்டிப் போடப் போகிறார். ஜாக்கிரதை!'' என்று அரற்றினான். அதே சமயம் ஜல ராட்சஸர்தலைவன் தன் ஆட்களோடு வந்து ''மரியாதையாகச் சரணடையுங்கள்'' என்று உரத்த குரலில் கூவினான்.

ஜெயசீலன் மகரகேதுவிற்கு ஜாடை காட்ட அவன் தன் நீர் யானையை ஏவினான். அது தனது துதிக்கையால் ஜலராட்சஸர் தலைவனின் மகனை உயரத் தூக்கியது. அதைக் கண்ட ஜலராட்சஸர் தலைவன் ''ஐயோ! என் மகனை ஒன்றும் செய்யாதீர்கள். நாங்கள் சரணடைந்துவிடுகிறோம்!'' என்று கதறினான்.

ஜெயசீலன் சித்தசாதகன் வந்ததைக் கண்டு மகிழ்ந்தான். காஞ்சனமாலை தன் தந்தையைக் கண்டு ''தந்தையே! நீங்கள் மாமா மகேஸ்வரனைப் பழிவாங்க வேண்டாம். அவர் தம் செய்கைக்காக வருந்துகிறார்,'' என்றாள்.

அப்போது ஜெயசீலன் ''அவரது மகள் மன்னர் கனகாட்சகரின் மருமகளாக ஆக முடியாதது மகேஸ்வரருக்கு வருத்தம் அளிக்கக் கூடியது தானே!'' என்றான்.

காஞ்சனமாலையோ, ''பத்மமுகியின் மனம் என்ன நினைக்கிறது என்பது எனக்குத் தெரியும். அவள் தேவசர்மாவை விரும்புகிறாள். எனவே அவளை தேவசர்மாவிற்குத் தான் மணம் செய்து வைக்க வேண்டும். அடுத்து மன்னர் எது பற்றிக் கவலைப்படுவார் என்பதும் எனக்குத் தெரியும். அதற்கும் வழி ஏற்பட்டு விடும்,'' என்று எல்லாம் தீர்மானமாகிவிட்டதுபோலக் கூறினாள். இதற்குள் தேவசர்மா ஜல ராட்சஸர் தலைவனைப் பிடித்து இழுத்து வந்து ஜெயசீலன் முன் நிறுத்தினான்.

அவனும் ''தலைவர் காஞ்சனவர்மனையும் பத்மமுகியையும் அழைத்து வர உன் ஆட்களை அனுப்பாவிட்டால் உன் மகன் கதி என்னவாகும் தெரியுமா?'' என்று கடுமையாகக் கூறினான்.

அத்தலைவனும் தன் ஆட்களுக்குக் கட்டளை இடவே, சில நிமிடங்களில் காஞ்சனவர்மனும், பத்மமுகியும் கொண்டுவரப்பட்டார்கள். மன்னன் கனகாட்சன் தன்

மகனைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தான். தான் அறிவித்தபடி காஞ்சனமாலையையும் காஞ்சனவர்மனையும் கண்டுபிடித்துத் தன்னிடம் ஒப்படைத்ததற்காக மன்னன் தன் நாட்டில் பாதியை ஜெயசீலனுக்கு அளிப்பதாக அறிவித்தான்.

சித்தசாதகன் உடனே ''அரசே! காஞ்சனமாலையை ஜெயசீலனுக்கு மணம் செய்து வைத்துவிடுங்கள்!'' என்றான். காஞ்சனமாலை நாணித் தலை குனிந்து கொண்டாள்.

சாதகன் தொடர்ந்து ''பத்மமுகி தேவசர்மாவை மணக்கட்டும். இத் திருமணங்கள் விமரிசையாக நடக்கட்டும். நான் இந்த ஏரிக்கரையில் இருந்து தவம் செய்து காலம் கழிக்கிறேன்,'' என்றான்.

தேவசர்மாவும் ''ஆம். இப்போது எல்லாம் ஒரு நல்ல முடிவை அணுகி விட்டது. ஜெயசீலனுக்குப் பாதி ராஜ்ஜியம் கிடைத்துவிட்டது. அவன் அரசகுமாரி காஞ்சனமாலையை மணப்பது முற்றிலும் சரியே. மேலும் அவள் அவனை மணக்க விரும்புகிறாள் என்பதையும் இப்போது தெரிந்து கொண்டுவிட்டோம். காஞ்சனமாலையும் சித்தசாதகனும் கூறியதுபோல நான் பத்மமுகியை மணக்கிறேன். அவளும் என்னை விரும்புகிறாள். இதை அவளோடு பழகிய காஞ்சனமாலையும் அறிந்து கொண்டுவிட்டாள். இதில் யாருக்கும் ஆட்சேபணை இல்லையே!'' என்று கேட்டான்.

கனகாட்சனும் ''எனக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை. நான் ஜெயசீலனை மகிழ்ச்சியுடன் என் மாப்பிள்ளையாக ஏற்கிறேன்,'' என்றான். மர்மக்குள மகேஸ்வரனும் ''எனக்கும் எவ்வித ஆட்சேபணையும் இல்லை. என் மகளே தேவசர்மாவை மணக்க விரும்பும்போது நான் அதற்குத் தடை சொல்ல மாட்டேன்,'' என்றான்.

அதன்பின் கனகாட்சனும் மகேஸ்வரனும் தம் மக்களுடன் புறப்பட்டார்கள். அவர்களை கோலாகலமாக்க குதித்துக் கும்மி அடித்து காட்டுவாசிகளும் ஜல ராட்சஸர்களும் வழி அனுப்பி வைத்தார்கள்.

முடிவுற்றது



நவீன வேதாளக் கதை

# மணிகண்டனின் மனம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீலே வீழ்த்தினான்.

பின் அவன் கீழே இறங்கி அதைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படிச் சிரமப்பட்டு விடா முயற்சியாகச் செயல் படுவது கண்டு ஆச்சரியப்படுகிறேன். ஆனால் ஒருவன் தான் நினைக்கிறபடியே ஒரு வேலையைச் செய்து முடித்துவிடுவான்



என்பதை உறுதியாகச் சொல்ல முடியாது. இதற்குக்காரணம் அவனது அலைபாய்ந்து ஓடும் மனமே. உதாரணத்திற்கு மணிகண்டன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதை சொல்லத் தொடங்கியது.

மணிப்புரம் என்ற நாட்டில் ஒரு கிராமத்தில் மணிகண்டன் என்ற இளைஞன் இருந்தான். தாய் தந்தையரிடம் அவன் மிகவும் மரியாதை வைத்திருந்தான். தன் சிறிய வயலில் சிரமப்பட்டு வேலை செய்த போதிலும் அதிலிருந்து கிடைக்கும் வருமானத்தில் அவனால் குடும்பத்தை நடத்த முடியவில்லை.

மணிப்புரத்தில் மழை சரியாகப் பெய்வதே இல்லை. அதனால் பயிர் விளைச்சல் மிகவும் குறைவாக இருந்தது. மணிகண்டனின் கிராமத்தை ஒட்டி ஓடும் காட்டாறு நல்லாறு வேறு திடீர்திடீரென வெள்ளப் பெருக்கு எடுத்து அந்த ஊரின் வயல்க ளை அவ்வப்போது நாசப்படுத்தி வந்தது.

கிராம மக்கள் அதிகாரிகளின் வாயிலாக மன்னனுக்கு வேண்டுகோள்கள் விடுத்து நல்லாற்றில் அணை கட்டி வெள்ள அபாயத்திலிருந்து காக்கும்படி வேண்டியும் எவ்வித நடவடிக்கையும் அரசாங்கத்தால் எடுக்கப்படவில்லை. இதனால் அந்த ஊர்வாசிகள் ஊரை விட்டு வெளியேறிக் கொண்டே இருந்தார்கள்.

மணிகண்டனும் ஒரு சிலரும் மட்டுமே அந்த கிராமத்தைவிட்டுப் போகவில்லை. சில நாட்களுக்குப் பின் நல்ல மழை பெய்தது. மணிகண்டன் தன் வயலில் உழைத்துப் பயிர் வளர்த்தான்.

தானியம் முற்றவே அறுவடை செய்து களத்திற்குக் கொண்டு போய் போரடித்து தானியத்தை குவியல்களாகக் கூட்டி வைத்தான். மறுநாள் அதை சந்தைக் குக் கொண்டு போய் விற்றுவிடலாம் என்று எண்ணி அவன் அங்கிருந்து தன் வீட்டிற்குச் சென்றான்.

ஆனால் அன்றிரவு நல்லாற்றில் பெரும் வெள்ளம் வந்து மணிகண்டனின் வயலில் இருந்த தானியத்தை அடித்துக் கொண்டு போய்விட்டது.

மறுநாள் தன் வயலைப் பார்த்த மணிகண்டன் இடிந்து போய் உட்கார்ந்துவிட்டான். அவனுக்கு வாழவே பிடிக்கவில்லை. அதனால்

அவ்வூரை விட்டே அவன் சென்று விட்டான்.

கால் போன போக்கில் இரண்டு நாட்கள் அலைந்து திரிந்து அவன் ஒரு காட்டிற்குள் சென்றுவிட்டான் மிகவும் களைத்துப் போனதால் அவன் ஒரு மரத்தடியே தங்கி இளைப் பாறலானான். அப்போது எதிரில் தென்பட்ட புதரில் ஏதோ ஒன்று 'பளபள' வென மின்னுவதைக் கண்டு அங்கே போய் அதைக் கையில் எடுத்துப் பார்த்தான்.

அது ஒரு வைரகங்கணம் அதில் ராஜமுத்திரை பொறிக்கப்பட்டிருந் தது. அதைத்தான் மடியில் எடுத்து வைத்துக் கொண்டு அங்கிருந்து தலைநகரை நோக்கிச் சென்றான்.

தலைநகருக்குப் பக்கத்தில் இருந்த ஒரு ஊரை அடைந்தபோது அங்கு அரசாங்க வீரர்கள், ''இது மன்னர் விடுக்கும் கடைசி எச்சரிக்கை மன் னரின் வைர கங்கணத்தை வைத் திருப்பன் நாளைக்குள் அதை மன் னரிடம் ஒப்படைக்க வேண்டும். நாளைக்குப் பிறகு அது யாரிடமாவது இருப்பது கண்டுபிடிக்கப்பட்டால் அவனுக்குக் கடும் தண்டனை விதிக் கப்படும்!'' என்று பறைசாற்றிக் கொண்டிருந்தார்கள்.

அதைக் கேட்ட மணிகண்டன் அது பற்றிய விவரத்தை அறிய ஒருவனி டம் கேட்கவே அவனும் ''மன்னரது வைர கங்கணம் வம்ச பரம்பரை யாக இருந்து வருவது. அது காணா மல் போனதால் இந்த அறிவிப்பு கடந்த ஒரு மாதமாகச் செய்யப்பட்டு



நாளை தான் கடைசி நாள் என்று தெரிவிக்கப்படுகிறது. நம் மன்னர் கடுமையாக நடந்து கொள்பவர். திருட்டு போன்ற குற்றங்களுக்கு மரண தண்டனை விதித்துவிடுவார். அந்த பயத்தில் அதை வைத் திருப்பவன் நாளைக்குள் அவரிடம் கொடுத்துவிடுவான் என்றே நினைக் கிறேன்,'' என்றான்.

மணிகண்டன் தான் கண்டெடுத்த வைர கங்கணத்தை மறுநாளே கொடுக்காமல் மூன்று நாட்கள் கழித்த பிறகே தர்பாரில் மன்ன னிடம் கொடுத்தான்.

அதைக் கண்டு மன்னன் மகிழ்ச்சி அடைந்தபோதிலும் கடுமையாக ''இது உனக்கு எங்கே கிடைத்தது?'' என்று அதட்டிக் கேட்டான். மணி கண்டனும் மூன்று நாட் களுக்குமுன் இங்கிருந்து சற்றுத் தொலைவிலுள்ள காட்டில் கிடைத் தது,'' என்றான்.



மன்னனும் கோபத்தோடு ''என் அறிவிப்பைக் கேட்கவில்லையா? ஏன் அதை அன்றே கொண்டு வந்து கொடுக்கவில்லை? அப்படிச் செய் யாததால் உனக்கு மரண தண்டனை கிடைக்கும் என்பதை அறிவாயா?'' என்று கேட்டான்.

மணிகண்டனும் ''அதை நன்கு அறிவேன்,'' என்று கூறிவிட்டு வேறு எதுவும் சொல்லாமல் நின்றான். அதைக் கண்ட மன்னன் ஆச்சரியப் பட்டுச் சற்று யோசித்தான்.

பிறகு தன் சிம்மாசனத்திலிருந்து எழுந்து மணிகண்டனின் பக்கம் போய் அவனைப் பரிவுடன் தட்டிக் கொடுத்து ''உனக்கு என்ன வேண் டுமோ கேள்!'' என்று கூறினான்.

அவனும் ''அரசே! நான் நல் லாற்றின் கரையுள்ள சிற்றூரில் வசிப்பவன். அந்த ஊரில் சரியாக மழையே பெய்வது இல்லை.

காட்டாறான நல்லாற்றில் வெள் ளம் திடீர்திடீரென்று வந்து எங் களுடைய பயிர்களைப் பாழ்படுத்தி விடுகிறது. அதனால் எங்கள் ஊரி லிருந்து சற்றுத் தொலைவில் அந்த ஆற்றில் ஓர் அணையைக் கட்டினால் வெள்ள அபாயம் இல்லாதும், வயல்களுக்குப் பாசன வசதியும் கிடைக்கும் என விளக்கி அதிகாரி கள் வாயிலாகத் தங்களுக்கு எங்கள் ஊரார் எவ்வளவோ மனுக்களை அனுப்பினார்கள். அதுபற்றி எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்பட வில்லை. தாங்கள் அந்த அணை யைக் கட்டிக் கொடுக்க வேண்டும்

என்பதே நான் இப்போது தங்களைக் கேட்டுக் கொள்வது. இதைத் தவிர எனக்கு வேறு எதுவும் வேண்டாம்,'' என்று கூறி தர்பாரிலிருந்து சென்று விட்டான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! மணிகண்டன் தான் வைர கங்கணத்தை கண்டெடுத்த அன்றே மன்னனிடம் பரிசாக அணைக்கட்டைக் கேட்டிருக்க லாமே ஏன் அப்படிச் செய்யாமல் மூன்று நாட்களுக்குப் பிறகே மன் னனிடம் வைர கங்கணத்தைக் கொடுத்தான்?

வாழவே பிடிக்காது ஊரை விட்டு வெளியேறிய அவன் மீண்டும் வாழ அணைக்கட்டைக் கட்டித் தரும்படி ஏன் கேட்டான்? கடுமையாக நடந்து கொள்ளும் மன்னன் மணிகண்ட னைத் தண்டிக்காமல் ஏன் பரிவு காட்டினான்?

இக்கேள்விகளுக்குச் சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்,'' என்றது.

விக்கிரமனும் ''மணிகண்டன் உழைத்து உண்ண விரும்புபவன். ஆசை பிடித்து அலைபவன் அல்ல. அதனால் தான் வைர கங்கணத்தை தான் கண்டெடுத்த அன்றே கொண்டு போய் மன்னனிடம் கொடுத்துப் பரிசை அடையவில்லை.

மூன்று நாட்களுக்குப் பின் மன் னனிடம் கட்டித்தரும்படி வேண் டினான். மணிகண்டன் தண்டனைக் குப் பயப்படாமலும், பிறர் பொரு ளுக்கு ஆசைப்படாமலும் இருப்பது கண்டே மன்னன் பரிவுடன் அவ னிடம் பேசினான்.

மேலும் ஓர் அரசன் மக்களுக்கு வசதிகள் செய்து தர வேண்டியது அவனது தலையாய கடமை என் பதை மணிகண்டன் மன்னனுக்கு உணர்த்தினான். பொதுநலன் கருதி அவன் கேட்டதைக் கண்டே மன்னன் வியந்து போனான்,'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.






# மொழியின் முதல் பாடம்

**கா**ளிதாசரைப் பற்றிய கதை இது. அவர் படிப்பில்லாத இளைஞனாக இருந்த போது ஒரு காளி கோவிலில் புகுந்து கதவை மூடிக் கொள்ள காளி தேவி தோன்றி அவனது நாக்கில் தன் திரிசூலத்தால் ஏதோ எழுதினாளாம். அதன் பயனாக மாபெரும் கவிஞராகி விக்கிரமாதித்தனின் தர்பாரில் நவரத்தினங்களில் ஒருவராக அவர்திகழ்ந்தார். நவராத்திரியின் கடைசியில் விஜயதசமி கொண்டாடப் படுகிறது. துர்க்காதேவி இந்த நாளில் கொடிய அரக்கன் மகிஷாசுரனைக் கொன்றார் என்பது ஐதீகம்.

சில மாநிலங்களில் நவராத்திரி முடிவில் சரஸ்வதி பூஜை சிறப்பாக நடத்தப் படுகிறது. விஜய தசமியன்று சில மாநிலங்களில் இது எங்கும் நடைபெறுவதைக் காணலாம். பள்ளிகளில் குழந்தைகளைச் சேர்க்கிறார்கள். வீடுகளில் பெரியவர் களைக் கொண்டு அட்சராப்பியாசம் என்று மணலையோ அல்லது நெல்லையோ பரப்பி அதில் 'ஹரி ஓம்' என்றோ 'அ' என்றோ குழந்தையின் விரலைப் பிடித்து எழுத வைக்கிறார்கள். இதற்காக வீடுகளிலும் சங்கங்களிலும் பண்டிதர்களையும் வித்வான்களையும் அழைப்பதும் உண்டு கேரளத்தில் கொடுங்கலூரிலுள்ள ஒரு மசூதி யில் கூட சென்ற ஆண்டில் குழந்தைகளுக்கு கல்வி கற்பிக்க ஆரம்பிக்கப் பட்டது. ஒரு முல்லா அக்குழந்தைகளைக் கற்பலகை களில் 'அ' என்ற எழுத்தை எழுத வைத்தார்.



பல ஆண்டுகளுக்கு முன்பெல்லாம் குழந்தையை அதன் தாத்தாவின் மடியிலோ, மாமாவின் மடியிலோ அல்லது வீட்டிலேயே மூத்தவராக இருப்பவரின் மடியிலோ உட்கார வைத்து பரப்பிய மணல் மீதோ அல்லது நெல் மீதோ எழுத வைப்பார்கள்.

இம்மாதிரிக் காட்சிகளை ஒவ்வொரு விஜயசதமி நாளன்றும் பல மாநிலங்களில் காணலாம்.

# நேர்முக எதிர்ப்பு



பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் காசியை பிரம்மதத்த குமாரர் என்ற இளவயது மன்னர் ஆண்டுவந்தார். அவர் எளிய வாழ்க்கை வாழ்க்கை வாழ்ந்து எப்போதும் தன் குடிமக்கள் சுகமாக வாழவே வழிசெய்து வந்தார்.

அவர் தன் கீழுள்ள பிரபுக்களிடம் நாடு முழுவதிலும் தாம் இன்னாரெனத் தெரிவிக்காமல் சுற்றிப் பார்த்து மக்களின் சுக துக்கங்களையும் அவர்கள் பேசிக் கொள்வதையும் கேட்டு வரும் படிக் கூறி அடிக்கடி அனுப்பி வந்தார். இதனால் மக்களிடம் அரசாங்க அதிகாரிகள் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்று அவருக்குத் தெரிந்தது. எந்த அதிகாரியாவது அல்லது பண்ணையாராவது முறைதவறி நடந்தது தெரிந்தால் அவர் மன்னர் முன் கொண்டுவரப்பட்டு எச்சரிக்கப் படுவார் அல்லது தண்டிக்கப்படுவார்.

மன்னர் கிராமத்து மக்கள் நன்கு பழகி ஒரு வரையொருவர் புரிந்து கொண்டு செயல் படுவதற்கு ஊக்கம் அளித்தும் வந்தார். அவர்களிடையே ஏற்படும் சண்டை சச்சரவுகளை அவர்களே தமக்குள் பேசித் தீர்த்துக் கொள்ளவும் ஏற்பாடு செய்திருந்தார். அமைச்சர்களும் அவர்களை அழைத்துப் பேசி அவர்களது பிரச்சினைகளுக்கு தீர்வுகாணவும் செய்தார்கள். எனவே காசி அமைதிக்கும் வளமைக்கும் உறைவிடமாக விளங்கி வந்தது.

மன்னர் தம் அந்தரங்கப் பணியாளர்களிடம் மக்கள் நம் நிர்வாகத்தில் என்ன குறைகளைக் காண்கிறார்கள்? என்று கேட்கும்போதெல்லாம் அவர்களும் மக்களுக்கு எவ்விதக் குறையும் இல்லை என்ற



உண்மையையே சொல்லி வந்தார்கள். ஆயினும் மன்னர் இதனால் திருப்தி அடைந்து விடவில்லை. சில சமயங்களில் அவரே மாறுவேடத்தில் நகரில் சுற்றி வந்து மக்களுடன் பேசி தாமே நிலைமையை அறிந்தும் வந்தார். அவர் சென்ற இடங்களில் எல்லாம் மக்கள் அவரது ஆட்சியைப் புகழ்ந்து தான் கூறினார்கள். யாரும் குறை இருப்பதாகக் கூறவில்லை.

ஒரு நாள் அவர் ''நான் நகரில் மட்டும் திரிந்து மக்களைப் பற்றி அறிந்து வருவது போதாது. நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று அவர்களது நிலைமையையும் பேச்சுகளையும் நானே நேரில் பார்த்தும் கேட்டும் வருவேன்,'' என்று தீர்மானித்துக் கொண்டார். அதனால் அவர் தன் ரதத்தில் அமர்ந்து தன் நம்பகமான தேரோட்டியை அதை ஓட்டச் சொன்னார். அன்று சில இடங்களுக்குப் போய்விட்டுத் தலை நகருக்கு அவர் திரும்பி வந்து கொண்டிருந்தார்.

ரதம் அவரது நாட்டிற்கும் அண்டை நாட்டிற்கும் பொதுவாக உள்ள ஓர் இடத்தில் ஒரு குறுகலான பாதையில் சென்று கொண்டிருந்தது. அதே பாதையில் எதிர்புறத்தில் இருந்து வேறொரு ரதம் வந்து கொண்டிருந்தது. இரு ரதங்களும் ஒன்றுக்கு மற்றது நேர்எதிரில் நின்றன. ரதங்களின் ஏதாவது ஒன்று சற்று பின்னால் சென்று வழி விட்டாலே மற்ற ரதம் முன்னே செல்ல முடியும். அதனால் காசி மன்னனின் தேரோட்டி மற்ற தேரோட்டியை நோக்கி ''ஐயா தேரோட்டியாரே! சற்று பின் நோக்கிச் செல்கிறீரா? இந்த ரதத்தில் அமர்ந்திருப்பவர் காசி மன்னர் என்று தெரிந்து கொள்ளுங்கள்!'' என்றான்.

அதுகேட்டு மற்ற தேரோட்டி ''ஐயா! உங்கள் மன்னரை வணங்குகிறேன். ஆனால் இந்த ரதத்தில் அமர்ந்திருப்பவரோ கோசல மன்னர் என்பதை அறிந்து கொள்ளுங்கள். அதனால் நீங்கள் உங்கள் ரதத்தைப் பின்நோக்கிச் செலுத்தி எங்களுக்கு வழி விடுங்கள்!'' என்றான்.

அதுகேட்டு காசி மன்னனின் தேரோட்டி '' உங்கள் மன்னருக்கு என் வணக்கங்கள். ஆனால் எங்கள் மன்னர் உங்கள் மன்னருக்கு ஏன் வழி விட வேண்டும்? அவர் எதில் எம் மன்னருக்குச் சமமானவர்? வயதிலா?

உயர்குலப் பிறப்பிலா? உம் நாடு அளவில் பெரியதா? இவற்றில் உங்கள் மன்னர் எதில் எங்கள் மன்னரை மிஞ்சியவர்?'' என்று கேட்டான்.

கோசல மன்னனின் தேரோட்டியும் ''நீர் கூறிய எல்லா அம்சங்களிலும் எம்மன்னர் உமது மன்னருக்குச் சமமே!'' என்றான். அப்போது காசி மன்னனின் தேரோட்டி ''சரி இனி ஆட்சியில் யார் சிறந்தவர் என்று பார்ப்போமா?'' எனவே, கோசல மன்னனின் தேரோட்டியும் ''ஆகா! பார்க்கலாமே. எம்மன்னர் குற்றவாளியைக் கடுமையாக தண்டிப்பார். சற்றும் இரக்கம் காட்ட மாட்டார்,'' என்றார்.

காசி மன்னனின் தேரோட்டியோ ''எம் மன்னர் அப்படிச் செய்ய மாட்டார். அவர் குற்றவாளிகளுக்கு அறிவுரைகளைக் கூறி மனம் மாறச் செய்து அவர்களைத் திருத்தி நல்ல குடிமகன்களாக ஆக்கிவிடுவார். எனவே எங்கள் மன்னர் தாம்...'' என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே கோசல மன்னன் தன் ரதத்திலிருந்து இறங்கி காசி மன்னனின் ரதம் வரை நடந்து சென்று அவருக்கு வணக்கம் செலுத்தினான்.

பிரம்மதத்த குமாரரும் தம் ரதத்திலிருந்து இறங்கி வந்து கோசல மன்னனைக் கட்டித் தழுவினார். இதற்குப் பின் கோசல மன்னன் தன் தேரோட்டியிடம் ''காசி மன்னர் எல்லாவிதத்திலும் என்னைவிட உயர்ந்தவரே. நீ என் ரதத்தைப் பின்னால் ஓட்டிப் போய் நகர்ந்து அவரது ரதத்திற்கு வழிவிடு!'' என்றான். கோசல மன்னனின் தேரோட்டியும் தன் மன்னனின் கட்டளைப்படி நடந்தான்.

பிரம்மதத்த குமாரர் போதிசத்வரின் மறு அவதாரமே. அவருடைய அறிவுரைகளை காசி மன்னர் கோசல மன்னருக்குக் கூறி விளக்கினார். அம்மன்னனும் அவரது அறிவுரைகளை ஏற்று அவற்றின்படி நடந்ததோடு அவரது உற்ற நண்பனாகவும் ஆகிவிட்டான்.

இவ்வாறு இரு மன்னர்கள் சகிப்புத் தன்மையுடன் ஒருவர் மற்றவருக்கு விட்டுக் கொடுத்ததால் பிரச்சினை சுமுகமாகத் தீர்ந்தது. எனவே, யாவரும் மற்றவருக்கு விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை கொள்ள வேண்டும். இது போதிசத்வரின் அறிவுரை.





# குள்ள ராட்சஸி உள்ளம்

**கா**டுகளும் மலைகளும் சூழ்ந்தது தங்கமேடு என்ற சிறுகிராமம். அந்த ஊரின் ஆரம்பப் பள்ளியில் அனந்தன் ஆசிரியராகப் பணி புரிந்து வந்தான். அவன் சாரதா என்ற நற்குணவதியை மணந்து எளிய வாழ்க்கை நடத்தி வந்தான். அவனது அடுத்த வீட்டில் மங்கம்மா என்பவள் வாழ்ந்து வந்தாள்.

ஒருநாள் சாரதாவும் மங்கம்மாவும் அந்த ஊர் பணக்காரர் பரமானந்தத்தின் வீட்டில் நடக்கும் ஆண்டு நிறைவு விழாவிற்குப் புறப்பட்டனர். அப் போது மங்கம்மா, சார்தாவின் கழுத் திலும் காதிலும் ஒரு நகை கூட இல்லாதைக் கண்டு ''பணக்காரர் வீட்டிற்கு கௌரவமாகப் போக வேண்டும். உன் நகைகளை அணிந்து கொண்டு வா!'' என்றாள்.

அப்போது சாரதா, ''ஏழைகளான எங்களிடம் நகை எதுவும் இல்லையே'' என்றாள். மங்கம்மாவும் ''என்தோடுகளைக் கொடுக்கிறேன். அணிந்து கொள்!'' என்றாள்.

சாரதா அதெல்லாம் வேண்டாம் என்று கூறியும் மங்கம்மா வற்புறுத்தித் தோடுகளைக் கொடுத்தாள். சாரதாவும் விருப்பம் இல்லாமல் அவற்றை வாங்கிக் காதுகளில் அணிந்து கொண்டாள். பணக்காரர் வீட்டு விழாவிற்குப் போய் அவள் தன் வீட்டிற்கு வந்தபோது ஒரு காதில் தோடு இல்லாதது கண்டு திடுக்கிட்டாள். அந்தத் தோடின் திருகாணி தளர்ந்து கழன்று விழுந்து தோடும் எங்கோ விழுந்துவிட்டது. மற்றொரு காது தோடு மாத்திரமே இருந்தது.

மங்கம்மாவுக்கு இரண்டு தோடுகளையும் கொடுக்க வேண்டுமே என்ன செய்வது என்று அவள் திகைத்தாள். மாலையில் பள்ளியிலிருந்து அனந்தன் வந்ததும் சாரதா அவனிடம் நடந்ததைக் கூறினாள். அவனும் ''அடடா! அது ஆயிரம்

- கௌரிநாதன் -

ரூபாய் பெறுமே அவ்வளவு பணத்திற்கு நான் எங்கே போவேன்?'' என்று கவலைப்பட்டவாறே கூறினான். பிறகு அவன் தான் வெளியே போய் விட்டு வருவதாக சாரதாவிடம் சொல்லிவிட்டுக் கால் போன போக்கில் சென்றான்.

அவன் அப்படியே போய் ஓர் இடத்தில் நின்றான். அவன் நிமிர்ந்து பார்த்தபோது தான் ஒரு மலைக் குகைக்கு முன் இருப்பதையும் அதன் வாசலில் ஒரு குள்ள ராட்சஸி உட்கார்ந்திருப்பதையும் கண்டான். அவள் அனந்தனைப் பார்த்ததும் ''யார் நீ? இந்த வேளையில் இங்கு ஏன் வந்தாய்?'' என்று கேட்டாள். அனந்தனோ அவளைக் கண்டு பயந்து போய் ''தோடு, தோடு'' என்று வாய்க்கு வந்ததைச் சொன்னான்.

அதைக் கேட்ட குள்ள ராட்சஸி ஆச்சரியத்தோடு ''தோடா! அது மட்டும் அல்ல. இன்னும் என்னென்னவோ நகைகளை எல்லாம் என் தாயார் என் திருமணத்திற்காகச் சேர்த்து வைத்திருக்கிறாள். ஆனால் என்னைப் பெண் பார்க்க வந்தவர்கள் நான் குள்ளமாக இருப்பது கண்டு வேண்டாம் என்று சொல்லி போய் கொண்டே இருக்கிறார்கள். அதனால் திருமணம் என்றாலே எனக்கு வெறுப்பு. என் திருமணத்திற்காக என் தாயார் சேர்த்து வைத்துள்ள நகைகளை எல்லாம் உனக்குக் கொடுக்கிறேன். எடுத்துக் கொண்டு போ!'' எனக் கூறி குகைக்குள் போய் ஒரு மூட்டையை எடுத்து வந்து



அவனிடம் கொடுத்தது. அனந்தன் மகிழ்ந்து போய் அந்த நகை மூட்டையை எடுத்துக் கொண்டு தன் ஊருக்குத் திரும்பி வந்தான்.

அவன் தன் வீட்டை அடைந்த போது பக்கத்து வீட்டு மங்கம்மா அவனை பார்த்து ''இந்த வேளையில் எங்கே போய்விட்டு வருகிறாய்? கையில் என்ன மூட்டை?'' என்று கேட்டாள்.

அனந்தனும் தோடு காணாமல் போனதிலிருந்து அதுவரை நடந்ததைக் கூறினான். பிறகு ராட்சஸி கொடுத்த நகைகளை அவள் முன் கொட்டி அவற்றிலிருந்து ஒரு ஜதைத் தோடுகளை எடுத்துக் கொடுத்து விட்டு மற்ற நகைகளை மூட்டையில் கட்டி எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்று விட்டான்.

குள்ளராட்சஸி அனந்தனுக்கு



நகைகளைக் கொடுத்தாள் என்பதை அறிந்த மங்கம்மா தூங்கிக் கொண்டிருந்த தன் கணவனைத் தட்டி எழுப்பி ''நம் மாட்டு வண்டியைக் கட்டுங்கள். குள்ளராட்சஸி கொஞ்சம் நகைகளை அனந்தனுக்குக் கொடுத்திருக்கிறாள். அவளிடம் நிறைய நகைகள் இன்னமும் இருக்கும். நாம் போய் அவற்றை வாங்கி வருவோம்'' என்றாள். அவள் கணவனும் வண்டியை கட்டி அதில் மங்கம்மாவை ஏற்றிக் கொண்டு அனந்தன் குறிப்பிட்ட மலைக் குகைக்குச் சென்றான்.

குகைவாசலில் குள்ளராட்சஸி கவலையுடன் உட்கார்ந்திருந்தாள். மங்கம்மா அவள் முன்போய் அனந்தனுக்கு நகைகள் கொடுத்ததுபோலத் தனக்கும் நகைகள் கொடுக்குமாறு கேட்டாள்.

குள்ள ராட்சஸியோ, ''என்னிடம் இருந்ததே அந்த நகைகள் தாம். நான் அனந்தன் கூறியதைக் கேட்டு இரக்கப்பட்டு அவற்றைக் கொடுத்தற்காக என் தாயார் என்னைக் கண்டபடி திட்டிக் கொண்டிருக்கிறாள். உங்களை வேறு பார்த்து விட்டால் உங்களைப் பிடித்து விழுங்கிவிடுவாள். இங்கே நிற்காதீர்கள். ஓடிப் போய்விடுங்கள்!'' என்றாள்.

அப்போது மங்கம்மா ''நீ கொடுத்த நகைகள் எல்லாம் என் பக்கத்து வீட்டில் தான் உள்ளன. என்னுடன் வா. நீ அந்த நகைகளை எடுத்து வந்து உன் தாயாரிடம் கொடுத்து அவள் கோபத்தைத் தணி!'' என்றாள்.

அப்போது ராட்சஸி ''நாம் உன் ஊர் போய்ச் சேரும்போது விடிந்து விடும். அதன் பிறகு பகல் தானே. பகல் என்றாலே எனக்கு பயம் இரவில் தான் என்னால் எதையும் செய்ய முடியும்,'' என்றாள்.

மங்கம்மாவும் ''கவலை வேண்டாம். நான் ஒரு சாக்குப்பை கொண்டு வந்திருக்கிறேன். நீ பகல் முழுவதும் இதற்குள் மறைந்து இரு. இரவில் அனந்தனின் வீட்டிற்குள் போய் அவர்களை அடித்து உதைத்துப் போட்டுவிட்டு உன் நகைகளை எடுத்துக் கொண்டு இங்கே வந்து விடலாம்'' என்றாள். குள்ள ராட்சஸி அதற்கு ஒப்புக் கொண்டு மங்கம்மாவுடன் கிளம்பிச் சென்றாள்.

அனந்தன் நகைகளோடு வீட்டிற்குப் போய் தன் மனைவியிடம் அவை தனக்குக் கிடைத்த விதத்தைக்

கூறினான். அப்போது சாரதா ''இது நாம் கஷ்டப்பட்டு உழைத்து சம்பாதித்தது அல்ல. இதை நாம் வைத்துக் கொள்ளக் கூடாது. நாளை இருட்டிய பிறகு நான் போய் அந்தக் குள்ள ராட்சஸியை கூட்டிக் கொண்டு வருகிறேன். அவளிடமே இதைத் திருப்பிக் கொடுத்துவிடலாம்,'' என்றாள். அனந்தனும் அவ்வாறே செய்யச் சொல்லிவிட்டான்.

மறுநாள் இருட்டிய பின் சாரதா அனந்தன் குறிப்பிட்ட குகைக்கு சென்றாள். ஆனால் குகை வாசலில் குள்ள ராட்சஸிக்கு பதிலாக ஒரு பெரிய ராட்சஸி உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவள் திகைத்தாள்.

பெரிய ராட்சஸியோ வந்தது தன் மகள் குள்ள ராட்சஸிதான் என்று எண்ணி ''மகளே! வந்துவிட்டாயா? உன்னைக் கோபித்துக் கொண்டது தவறு தான். வா, குகைக்குள் போவோம்'' என்றாள். அப்போது சாரதா, ''நான் உன் மகள் அல்ல. ஆனால் உன் மகள் கொடுத்த நகைகள் எல்லாம் என் வீட்டில் தான் இருக்கின்றன. என்னோடு வா! அவற்றைக் கொடுத்துவிடுகிறேன்,'' என்றாள்.

பெரிய ராட்சஸியோ, ''என் மகளே என்னோடு இல்லாதபோது அவளுடைய நகைகள் எனக்கு எதற்கு? வேண்டவே வேண்டாம்,'' என்றாள்.

சாரதாவும் சற்று காட்டமாக ''உன் பெண்ணின் நகைகள் எனக்கு எதற்கு? வந்து நீ வாங்கிக் கொண்டு போ. எங்கள் கஷ்டத்தை நாங்கள் அனுபவித்துக் கொள்கிறோம்.



நீங்களெல்லாம் இரக்கப்பட வேண் டாம்,'' என்றாள்.

ராட்சஸியும் ''சரி. என் மகள் என்றாவது திரும்பி வருவாள். அப் போது அவளுக்குக் கொடுக்க அவை என்னிடம் இருப்பது நல்லதே!'' என்று கூறி சாரதாவுடன் அவள் வீட்டிற்குக் கிளம்பினாள்.

இருவரும் ஊரை அடைந்து அனந் தனின் வீட்டை அணுகினார்கள். அப்போது மங்கம்மாவின் வீட்டில் சாக்குப் பைக்குள் அடைபட்டிருந்த குள்ள ராட்சஸி ''ஓடிவந்து என்னை விடுவி'' என்று உரக்க இரண்டு மூன்று தடவை கூவினாள்.

அதைக் கேட்ட பெரிய ராட்சஸி விருட்டென்று மங்கம்மாவின் வீட் டிற்குள் பாய்ந்தாள். சாக்குப் பைக் குள்ளிருந்து தன் மகள் அலறுவது கண்டு அவள் முதலில் தன் மகளை விடுவித்தாள். அவளைக் கட்டிப் போட்டது மங்கம்மா என்று கேட் டதுமே தீர விசாரிக்காமல் பெரிய ராட்சஸி மங்கம்மா மீதும் அவள் கணவன் மீதும் பாய்ந்து கீறிக் கடித்து படுகாயப்படுத்தினாள். பிறகு அவள் தன் மகள் குள்ள ராட்சஸியின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

பெரிய ராட்சஸிக்காகக் காத்துக் கொண்டிருந்த சாரதா அவள் மங் கம்மாவின் வீட்டை விட்டு வெளியே வந்ததும் ''வா, என் வீட்டிற்கு. உன் மகளின் நகைகளை வாங்கிக் கொண்டு போ!'' என்றாள்.

பெரிய ராட்சஸியோ ''முடியாது. நாங்கள் இனிமேல் இந்த பக்கமே தலை வைத்துக் கூட படுக்க மாட் டோம். அந்த நகைகளை என் பரிசாக நீயே வைத்துக் கொள்!'' என்று கூறிய வாறே தன் மகளோடு வெகு வேக மாக ஓடியே போய்விட்டாள். சாரதா வும் தன் வீட்டை அடைந்து தன் கணவனிடம் நடந்தைக் கூறினாள்.

மங்கம்மாவும அவள் கணவனும் ராட்சஸி கீறிய முகத்தோடு அந்த ஊரில் இருக்க விரும்பாமல் இர வோடு இரவாக வீட்டைக் காலி செய்து விட்டு அந்த ஊரைவிட்டே எங்கோ போய்விட்டார்கள்.



# ஆத்திகனும் நாத்திகனும்

ராமன், பரதன் ஆகிய இருவரும் சிறு வயதிலிருந்தே நெருங்கிய நண்பர்கள். ஆனால் இருவரது கருத்துக்களும் வேறுபட்டிருந்தன. ராமன் ஓர் ஆத்திகனாகவும் பரதன் நாத்திகனாகவும் இருந்தனர்.

கடவுளின் கருணையால் மழை பொழிகிறது என்று ராமன் சொன்னால், உடனே வெள்ளத்தால் சேதம் ஏற்படுவதும் அந்தக் கடவுளின் கருணையே என்று பரதன் பதில் சொல்வான். இயற்கை நமக்கு அளித்துள்ள தண்ணீர், காற்று எல்லாம் கடவுளின் கருணையே என்று ராமன் சொன்னால், பதிலுக்கு புயல், பூகம்பம் ஆகியவையும் அந்தக் கடவுளின் கருணையே என்று பரதன் சொல்வான். இருவருக்கும் இதில் வாக்குவாதம் ஏற்படுவது உண்டு.

காலப்போக்கில் நண்பர்கள் இருவரும் முதிர்ந்த வயதை அடைந்து வாழ்க்கையின் இறுதிக்கட்டத்தை அடைந்துவிட்டனர். ராமன் இறக்கும் சமயம், அவனை சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்ல தேவதூதர்கள் வந்தனர். ராமன் அவர்களிடம் தனது நண்பனும் இறக்கும் தருவாயில் இருப்பதாகவும், அவனையும் சொர்க்கத்தில் கடவுளிடம் அழைத்துச் செல்ல வேண்டும் என்றான். கடவுளை நேரில் பார்த்தால், தன் நண்பன் மனம் திருந்தி ஆத்திகன் ஆவான் என்று ராமன் நம்பினான். தேவதூதர்களும் அப்படியே செய்ய, பரதன் கடவுளை நேருக்குநேர் பார்த்தான்.

கடவுள் பரதனைப் பார்த்து ''நாத்திகனே! இப்போதாவது நீ என்னை நம்புகிறாயா?'' என்று கேட்டார். ''கடவுளே, நாங்கள் மிக சாதாரண மனிதர்கள். நாங்கள் அறிந்து கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. எனது அறிவுக் கண்ணைத் திறந்ததற்கு நன்றி,'' என்று மனம் திருந்திய பரதன் கடவுளைக் கும்பிட்டான்.



# பெப்ஸி ஜாக்கிரதை!



எஸ். ஸாரிகா திருவனந்தபுரத்தில் கேந்திரீய வித்யாலயா பள்ளியில் 11ம் வகுப்பில் பயிலும் மாணவி. மூன்று வருடத்திற்கு முன்பு, தனது பள்ளியில் நடைபெற்ற அனைத்திந்திய பள்ளி விஞ்ஞானக் கண்காட்சியில், 'பெப்ஸியினால் நமது உடல்நலத்திற்கு கேடு' என்ற தலைப்பில் பங்கு எடுத்துக் கொண்டாள். சமீபத்தில் எல்லோராலும் பரபரப்புடன் விவாதிக்கப்பட்ட விஷயம் இது என்று நமக்குத் தெரியும். பெப்ஸி அருந்துவதால் நமது பற்களுக்கு எவ்வாறு கெடுதல் உண்டாகிறது என்பதைப் பற்றி ஸாரிகா புள்ளி விவரங்களுடன் விளக்கினாள். அவள் கண்டுபிடித்து விளக்கிய விஷயங்களில் சில: கோக்காகோலா நமது குடலைப் பாதிக்க வல்லது. 500 மி.லி. கோலா பாட்டிலில் 38 மி.கி.அளவு காஃபின் என்ற நச்சுப் பொருள் உள்ளது. இதை ஒரு பெண் தொடர்ந்து அருந்தினால் அவள் மலடியாவதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஒரு பாக்கெட் சாக்லெட்டுகளில் உள்ள சர்க்கரை ஒரே பாட்டில் பெப்ஸியில் இருக்கிறது. ஹாலிவுட் நட்சத்திரமான மைக்கேல் ஃபாக்ஸ் தொடர்ந்து பெப்ஸி அருந்தியதால் 'பார்க்கின்ஸன் டிஸீஸ்' என்னும் கொடிய வியாதியால் பீடிக்கப்பட்டார். சென்னையில் இந்த ஆண்டு நடந்த தென்பிராந்திய விஞ்ஞானக் கண்காட்சியிலும் இதே தலைப்பில் கலந்துகொண்டு பங்கேற்ற ஸாரிகாவுக்கு முதல் பரிசு கிடைத்தது.

# குழந்தைப் பின்னணிப் பாடகி

மூன்று வருடத்திற்கு முன்பு தனது பதினோரு வயதிலேயே, சுபிட்சா ரங்கராஜன் ஒரு திரைப்படத்திற்காக பின்னணி இசை பாடியிருக்கிறார். இதைத் தெடர்ந்து லகான், புகார் ஆகிய இந்திப் படங்களிலும் டும்டும்டும் எனும் தமிழ்ப் படத்திலும் பின்னணி இசை பாடியிருக்கிறார். இந்த ஆண்டு அமெரிக்காவில் கொலராடோ எனும் இடத்தில் இளைய பாடகர்களுக்கான இசை நிகழ்ச்சியில் இவர் இந்தியாவின் சார்பாகக் கலந்துகொண்டு இசை நிகழ்ச்சி நடத்தினார். இந்துஸ்தானி, கர்னாடிக் சங்கீதம் ஆகிய இரண்டிலும் தேர்ந்த சுபிட்சா, இளைய ராஜா, கார்த்திக் ராஜா, யுவன்சங்கர் ராஜா ஆகிய இசைஅமைப்பாளர்கள் இசையமைத்தப் பாட்டுக் கள் சிலவற்றை பாடியிருக்கிறார். இந்தச் சிறுமி இப்போது பதினோராவது வகுப்பில் படிக்கிறார்.



# கல்லும் உருகியது


பபிதா குமாரி,
ஹரியானா


கே.வி. நந்தன்,
சென்னை

கடுமையான கோடைக்காலத்தின் ஒரு நண்பகல் நேரம்.

கதிரவன் தனது வெப்பக் கிரணங்களால், அந்த கிராமத்தை வறுத்து எடுத்துக் கொண்டு இருந்தான். அனைத்து மக்களும் வெய்யிலுக்கு பயந்துகொண்டு வீட்டிற்குள்ளேயே முடங்கிக் கிடந்தனர்.

அந்த கிராமத்தின் ஒரு கோடியில் ஓர் ஓட்டு வீட்டில் ஒரு வயதான கிழவி வசித்து வந்தாள். அவளும் தன் வீட்டுக் கதவுகளை மூடிவிட்டு, வீட்டுக்குள் அமர்ந்து இராட்டையில் நூல் நூற்றுக்கொண்டு இருந்தாள்.

அந்தக் கிழவியின் பேரப்பிள்ளை பக்கத்தில் அமர்ந்து பாட்டிக்கு உதவி செய்ய, ''சுற்று, சுற்று, இராட்டையே! தருவாய் எனக்கு நூல்...'' என்று பாடிக் கொண்டே, இராட்டையின் சக்கரத்தை கையால் சுழற்றி நூல் நூற்றுக் கொண்டிருந்தாள்.

அந்த சமயம் யாரோ அவள் வீட்டுக் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. அவள் சிரமப்பட்டு எழுந்து கதவைத் திறந்து பார்த்தால், நான்கு வாலிபர்கள் நின்று கொண்டு இருந்தனர்.

அதில் ஒருவன், ''பாட்டி, வெளியில் வெய்யில் கொளுத்துகிறது. இளைப்பாற மர நிழல்கூட இல்லை. நாங்கள் தாகத்தால் தவிக்கிறோம். உங்கள் வீட்டில் நாங்கள் மாலை வரை சற்று ஓய்வு எடுத்துக் கொள்ளலாமா?'' என்று பணிவுடன் கேட்டான்.

அந்த வாலிபனைப் பார்த்தவுடன், கிழவிக்கு சென்ற வருடம் கடுங்கோடையின் வெப்பம் தாளாமல் இறந்த தனது சொந்த மகனைப் போலவும், கூட இருந்தவர்கள் தன் மகனது நண்பர்களைப் போலவும் தோன்றியது. உடனே அந்த வாலிபன் மேல் இனம் தெரியாத பாசம் மேலிட, கிழவி, ''மகனே, இதை உன் வீடாக நினைத்துக் கொள். எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் தங்கலாம்,'' என்றாள்.

அந்த வாலிபர்கள் இளைப்பாறிக் கொண்டிருந்தபோது, கிழவி அவர்களுக்காக குளிர்பானம் தயாரிக்க ஆரம்பித்தாள்.

இப்படி அவர்களுக்காக இரக்கப்பட்டு கிழவி அவர்கள் தாகத்தைத் தணிக்க முயற்சி செய்கையில், அந்த வாலிபர்களோ இதற்கு எதிர்மாறாக



யோசித்துக் கொண்டு இருந்தார்கள்.

அவள் பிள்ளையைப் போல தோற்றமளித்த வாலிபன், திடீரென எழுந்து வந்து கிழவியின் முன் ஒரு துப்பாக்கியை நீட்டினான். ''கிழவி, ஏதாவது சத்தம் போட்டால், உடனே உன்னைச் சுட்டுவிடுவேன்,'' என்று உறுமினான்.

கிழவியின் பேரப் பிள்ளை இதைக் கண்டு பயந்து நடுங்கினான். ஆனால் கிழவியோ பயத்தின் சாயலே இல்லாமல் மிகத் தெளிவாக இருந்தாள்.

இதற்குள் மற்ற மூவரும் வீட்டில் உள்ள பொருட்களை கொள்ளையடிக்கத் துவங்கினர். இவற்றையெல்லாம் அமைதியாகப் பார்த்துக்கொண்டிருந்த கிழவி, தன்முன் துப்பாக்கியை நீட்டிக் கொண்டிருந்த வாலிபனை நோக்கி, ''மகனே, நான் ஏற்கனவே இது உன் வீடு எனக் கூறிவிட்டேன். இந்த வீட்டிலுள்ள பொருட்கள் எல்லாம் உனக்கே சொந்தம். எதை வேண்டுமானாலும் எடுத்துக்கொள். ஆனால் நான் அன்புடன் தயாரித்த இந்த சர்பத்தை குடித்துவிடுங்கள்,'' என்றாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட அந்த நான்கு வாலிபர்களுக்கும், இதயத்தை துப்பாக்கி குண்டினால் துளைத்ததுபோல் இருந்தது. அவர்



களது மனசாட்சி உறுத்த ஆரம்பித்தது. "ஆஹா, நாம் என்ன காரியம் செய்கிறோம்? நமக்கு கோடை வெய்யிலில் இளைப்பாற இடம் தந்தாள் இந்தக் கிழவி. அவளிடமே நாம் கொள்ளையடிக்க முயற்சி செய்தது முதல் தவறு. ஆனால் அதற்குப் பிறகும், இவள் நமது குற்றத்தை பொருட்படுத்தாமல், நமக்குக் குளிர்பானம் தந்து நம்மை ஒரு தாயினைப் போல உபசரிக்கிறாள். இதற்கு மேலும் இவள் வீட்டில் கொள்ளையடிக்க முயன்றால், அந்தப் பாவத்திற்கு மன்னிப்பே கிடையாது," என்று யோசித்து சிலை போல நின்றனர்.

துப்பாக்கி ஏந்திய வாலிபன் தன் தாயை நேரில் காண்பதுபோல் உணர, துப்பாக்கியை நழுவ விட்டான்.

அடுத்த கணம், அந்நால்வரும் கிழவியின் பாதத்தில் வீழ்ந்து வணங்கினர்.

அந்தத் திருடர்களை தனது அன்பினால் வென்றுவிட்ட பெருமையுடன், கிழவி புன்னகை புரிந்தாள்.

*மகன் :* அப்பா, நீங்கள் எப்போது எகிப்திற்குப் போனீர்கள்?

*தந்தை :* நான் எகிப்து போனதே இல்லையே!

*மகன் :* பிறகு உனக்கு மம்மி எப்படி கிடைத்தார்கள்?

*- சி. ஸ்ரீஜா (13), தூத்துக்குடி.*

# படிப்பினை



பி. சுவாமிநாதன்,
சென்னை

"டேய், சீக்கிரம் எழுந்திருடா! ஸ்கூலுக்கு போக வேண்டாமா?" தாயின் சொற்கள் மணிக்கு வேப்பங்காயாய் கசந்தன. பள்ளிக்குச் செல்லவே மணிக்குப் பிடிக்கவில்லை.

"சே! சும்மா படி, படின்னு எப்பப் பார்த்தாலும் படிச்சுக்கிட்டே இருக்கணுமா? இத கேட்டுக்கேட்டுப் புளிச்சுப் போச்சு," இதுதான் மணியின் எண்ணம்.

மணியின் தந்தை குப்புசாமி ஒரு



சலவைத் தொழிலாளி. கல்வியின் அருமைபெருமைகளை உணர்ந்தவர். எப்படியாவது தன் மகனை ஓர் ஆபீசராக்க வேண்டும் என்பதே அவரது இலட்சியம். அதற்காக அவர் அல்லும் பகலும் பாடுபட்டார். ஆனால் மணி படிப்பின் மீது வெறுப்பை உமிழ்ந்தான். இதனால் அவர் வருத்தப்படாத நாளே இல்லை எனலாம்.

மணிக்குப் படிப்பின் மீது இருந்த வெறுப்பு கூடியது. ஆசிரியரிடம் அடி வாங்குவதும், திட்டு வாங்குவதும், மாணவர்களின் ஏளனப் பார்வைக்கு உள்ளாவதும் அவனது வெறுப்பை மேலும் கூட்டின.

வெறுப்பின் உச்சிக்கே சென்ற அவன் ஒருநாள், "நைனா! நான் இனிமேல் ஸ்கூலுக்கே போக மாட்டேன். நானும் உன்கூட வேலை பார்க்க வரேன்," என்று திக்கித் திணறிக் கூறினான்.

இதைக் கேட்டுக் குப்புசாமி சிறிதுநேரம் மௌனமானார். பின்பு, "சரி. இனிமே ஸ்கூலுக்குப் போகாதே! என்னோடு வேலை பார்க்க வந்து விடு!" என்று கூறினார்.

இதைக் கேட்ட மணி மிகவும் ஆச்சரியப்பட்டான். தந்தை தன்னை நையப் புடைப்பார். குறைந்தபட்சம் திட்டுவார் என்றுதானே அவன்





நேஹா அடிகா,
பெங்களூர்

எதிர்பார்த்தான்! உடனே கழுதையை இழுத்துக் கொண்டு வேகமாக நடந்தான். சந்தோஷம் அவன் முகத்தில் பீறிட்டது.

மணி வேலை எல்லாம் ரொம்பச் சுலபம் என்று நினைத்தான். துணியைத் தண்ணீரில் முக்கி, காய வைத்து, மடித்து, கழுதை மேல் ஏற்றினால் வேலை முடிந்தது என்றே அவன் நினைத்தான்.

ஆனால், 'ஐயோ! துணியில் எத்தனை அழுக்கு! இதை துவைப்பதற்குள் பாதி உசிரு போயிடும். போதுமடா சாமி! துணி காயவே மாட்டேங்குதே! இந்த கழுத ஒண்ணு. ஒரு எடத்துல நிக்குதா? பாவம் நைனா, என்னா கஷ்டப்படுறாரு!' என்று போகப்போக அந்த வேலையின் கஷ்டங்களை உணர ஆரம்பித்தான்.

பேசாம ஸ்கூலுக்கே போய் ஒழுங்காகப் படிக்கலாம் என்ற எண்ணம் அவன் மனதில் நாளுக்கு நாள் வளர்ந்தது.

திடீரென்று ஒருநாள் தன் தந்தையிடம், ''நைனா, நான் ஸ்கூலுக்கே போறேன். ஒழுங்கா படிச்சு பெரிய ஆபிசரா வந்து காட்டறேன்,'' என்று அழுது கொண்டே கூறினான்.

இதைக் கேட்டவுடன் குப்புசாமி தனது மகனை இறுக அணைத்துக் கொண்டார். ''இப்ப தாண்டா நீ என் புள்ள,'' என்றார் கண்ணீர் மல்க.

''நைனா, நான் ஸ்கூலுக்குப் போகலேன்னு சொன்னப்பவே என்ன அடிச்சு உதைச்சு போக வெச்சுருக்கலாமே. ஏன் அப்படிச் செய்யல?'' என்று கேட்டான் மணி தெளிந்த முகத்துடன்.

''அடிச்சுருக்கலாம். ஆனா அது உன் வெறுப்ப ரொம்ப அதிகமாக்கிடும். அப்பால நீ படிக்கவே மாட்டே. இப்ப உனக்குக் கஷ்டம் எல்லாம் புரிஞ்சிடுச்சு. இனிமே நீ ஒழுங்காகப் படிச்சு பெரிய ஆபிசரா ஆவாய்!'' என்றார் மிகவும் உறுதியுடன். அந்த உறுதி மணியையும் தொற்றிக் கொண்டது.



# இளவரசியும், தங்க வண்ணப் பறவையும்



கிருத்திகா
சுகவனம்,
சென்னை

முன்னொரு காலத்தில் சுகவர்மன் என்ற அரசன் இருந்தான். அவனுக்கு சுஹாசினி என்றொரு மகள் இருந்தாள்.

அந்நாட்டில் எல்லோரும் மகிழ்ச்சியுடன் இருந்தனர். சுஹாசினிக்கு இயற்கை அழகை அனுபவிப்பதில் மிகவும் பிரியம் இருந்தது. எப்போதும் ஏரி, குளம், நதிக் கரைகளில் சுற்றிக் கொண்டே உல்லாசமாக இருந்தாள்.

ஒருநாள் பக்கத்து நாட்டு அரசனான பிரதாப் தனது தூதனை ஒரு செய்தியுடன் சுகவர்மனிடம் அனுப்பியிருந்தான்.

சுகவர்மனிடம் அவனுக்கு மிகப் பிடித்த பரிசு எது என்பதையே தூதனிடம் கேட்டு அனுப்பியிருந்தார்.

''என் மகள் சுஹாசினிக்கு எது பிடிக்குமோ, அதுவே எனக்கும் பிடிக்கும்,'' என்று கூறி சுகவர்மன் தூதனை அனுப்பி வைத்தான்.

சுஹாசினிக்கு இயற்கை, மிருகங்கள், பறவைகள் ஆகியவை விருப்பமானவை என்று அறிந்துகொண்டு அவள் இதுவரை பார்த்தேயிராத ஒரு பரிசை தேர்ந்தெடுத்து சுகவர்மனிடம் அனுப்பினான்.

சுகவர்மன் அரசவைக்கு அந்தப் பரிசு வந்து சேர்ந்தவுடன், அனைவரும் அது என்ன என்று அறிய மிகுந்த ஆவலுடன் சூழ்ந்து கொண்டனர்.

ஒரு தங்கக் கூண்டுக்குள் ஒரு மிக அழகான தங்க வண்ணப் பறவையைக் கண்டு அனைவரும் வியப்பில் ஆழ்ந்தனர். சுஹாசினியும் மிக







புனித் ஜே.
ஹிரேமாத்,
பெங்களூர்

வியப்புடன் அதைப் பார்த்தாள்.

அந்தப் பறவையை கூண்டுடன் எடுத்துச் சென்று சுஹாசினி விளையாடும் இடத்தில் ஒரு மூலையில் தொங்கவிட்டனர்.

சுஹாசினி விளையாட விரும்பும் போது, அந்தக் கூண்டிலிருந்து பறவையை வெளியில் எடுத்து, இளவரசியுடன் விளையாடச் செய்து பிறகு அதைத் திரும்பி கூண்டிலேயே அடைத்து வைத்தனர்.

அந்தப் பறவையும், இளவரசியும் சில நாட் களிலேயே நண்பர்கள் ஆகி விட்டனர். விளையாட்டு முடிந்த வுடன் இளவரசி கையினால் ஒரு சைகை செய்தால், உடனே பறவை தானே கூண்டுக்குள் சென்று விடும்.



ஆனால் சில நாட்களிலேயே, அந்தப் பறவைக்கு விளையாட்டு ஆர்வம் குறைந்துவிட்டது. வெளி உலகத்தையே காணாததால் பறவை ஆர்வம் குறைந்து காணப்படுகிறது என இளவரசியின் தோழி கூறினாள்.

அடுத்த முறை பறவையை கூண் டிலிருந்து எடுத்தவுடன், சுஹாசினி அதை திறந்தவெளியில் எடுத்துச் சென்று விளையாட ஆரம்பித்தாள். ஆரம்பத்தில் பறவை மகிழ்ச்சியுடன் விளையாடியது.

ஆனால் சில நாட்களுக்குப் பிறகு, பழையபடியே உற்சாகம் இழந்து காணப்பட்டது. அதற்கு அந்தத் தோழி பறவைகளை சுதந்திரமாகப் பறக்கவிட வேண்டுமென்றும், அவற்றை கூண்டில் அடைப்பதே தவறு என்றும் கூறினாள்.

ஆனால் அப்படிப்பட்ட சுதந்திரம் கொடுத்தால், பறவை ஒரேயடியாக வெளியில் பறந்து சென்றுவிடும், பிறகு திரும்பி வராது என்ற



பயத்தினால், சுஹாசினி தோழியின் சொல்லைக் கேட்கவில்லை.

சுஹாசினி, ஒருநாள் காலை தன் கூண்டுக்குள் தங்க வண்ணப் பறவை இறந்து கிடக்கக் கண்டாள். அன்றிலிருந்து சோகத்தில் மூழ்கிய சுஹாசினி சிரிப்பதையே நிறுத்திவிட்டாள். இதைக் கண்ட அரசன் மருத்துவரை அழைத்து இறந்த பறவைக்கு உயிர் கொடுத்து தன் மகளை மகிழ்விக்க முடியுமா என்று கேட்க.

*ஆசிரியை :* ராமு, இமயமலை எங்கே இருக்கிறது?

*ராமு :* எனக்குத் தெரியாது, மேடம்!

*ஆசிரியை :* பெஞ்ச் மேல் ஏறி நில்!

*ராமு :* இப்பவும் எனக்கு இமய மலை தெரியவில்லை, மேடம்!

*- கௌசல்யா. எஸ். (11), பெங்களூர்.*

அது முடியாதென்றும் ஆனால் அதே போல இன்னொரு பறவை கிடைத்தால் இளவரசி பழையபடி மகிழ்ச்சி அடைவாள் என்றார் மருத்துவர்.



அந்த மாதிரி தங்க வண்ணப் பறவை பல இடங்களில் தேடியும் கிடைக்காததால், மறுபடியும் பக்கத்து நாட்டு அரசன் பிரதாப்புக்கு செய்தி அனுப்பி மற்றொரு தங்க வண்ணப் பறவை வரவழைக்கப்பட்டது. அரசர் அதை இளரசியிடம் விளையாடக் கொடுத்தார். ஆனால் சுஹாசினிக்கு பறவைகளின் சுதந்திரத்தின் அருமை நன்றாகப் புரிந்து விட்டது. ஆகவே கூண்டுடன் பறவையை எடுத்து காட்டுக்குச் சென்று பறவையை கூண்டைத் திறந்து விடுதலை செய்துவிட்டாள். கூண்டினையும் காட்டிலேயே ஒரு மரத்தில் நிரந்தரமாகத் தொங்க விட்டு விட்டு வந்துவிட்டாள்.



# சிலிகா ஏரி



வானில் தாரகைகள் கண் சிமிட்டும் காட்சியைத் தரையில் நீர்ப்பரப்பில் கண்டு களிக்கும் அரிய வாய்ப்பைப் பெற விரும்புகிறீர்களா?

இதற்கான அமைதியான அழகான ஆனந்தம் அளிக்கக் கூடிய இடம் ஒன்றுஉள்ளது. இங்கு தட்டுத் தடங்கல் இல்லாமல் திரிந்து வரலாம். புதுப்புது அனுபவங்களை அடையலாம். இங்கு பறவைகள் அண்டை நாடான பங்களாதேஷிலிருந்து மட்டுமல்ல, உலகின் பல்வேறு நாடுகளிலிருந்தும் வந்து போகின்றன.

ஆம். இது மிக நீளமான பரவலான ஏரிதான். இங்கு பல நாட்டுப் பறவைகள் குளிர்காலம் ஆரம்பமாகும் முன் வந்து

விடுகின்றன. இவை பல்லாயிரக்கணக்கான மைல்கள் மலைகளையும் கடல்களையும் நகரங்களையும் கிராமங் களையும் கடந்து வருகின்றன. அவை மிகுந்த நம்பிக்கை யுடனும் தாம் திரும்பிப் போக முடியும் என்ற எண்ணத் துடனும் ஏரியைச் சுற்றி வரும் மனிதர்களால் தமக்கு எவ்வித ஆபத்தும் இல்லை என்ற நம்பிக்கையுடனும் இங்கு வருகின்றன. சில சமயங்களில் ஓரிரு மனிதர்கள் இவற்றில் ஒன்றைக் கொன்றாலும் இவை மனம் வருந்தினாலும் தாம் அங்கு வருவதை நிறுத்தி விடுவதில்லை. ஏனெனில் மனிதர்கள் மீண்டும் அத்தவறைச் செய்ய மாட்டார்கள் என்றே இவை நம்புகின்றன.

இந்த ஏரிதான் ஒரிஸ்ஸா மாநிலத்தில் அதன் தலைநகரான



புவனேஸ்வரிலிருந்து 100 கி.மீ தொலைவிலுள்ள சிலிகா ஏரி. இது இந்தியாவிலேயே மிகப் பெரிய ஏரியாகும். இதன் பரப்பளவு 1200 ச.கி.மீ. சாதாரண நாட்களில் அமைதியாக உள்ள இது புயலடிக்கும் போது மிக உயரமான அலைகளை எழுப்பி பயங்கரமாக விளங்குகிறது. இவற்றால் இந்த ஏரியிலுள்ள சிறுசிறு தீவுகளும் அவற்றின் மலைகளும், அத்தீவுகளில் வாழ்பவர்களின் வீடுகளும் நீரில் அவ்வப்போது அமுங்கி மீண்டும் தென்படுகின்றன. இரவுவேளைகளில் இந்த ஏரியைப் பார்த்தால் ஏதோ தேவதை இதன் நீலநிற நீர் அலைகளை வீசி ஜால வித்தை புரிகிறதுபோல இருக்கும்.

பொதுவாக இதன் நீர் உப்பானது எனக் கூறப்பட்டாலும் அதை அப்படியே ஏற்று

# நீலநிறக் கடல் ஏரி

*சிலிகா ஏரி 1100 ச.கி.மீ பரப்புடைய உப்பு நீர் ஏரி. இது இந்தியாவில் மிகப் பெரியது. பல தீவுகளைக் கொண்ட இது பல்வித நீர்வாழ் உயிரினங்கள், பறவைகளைக் கொண்ட இடமாகவும் விளங்குகிறது. இந்த ஏரியைச் சுற்றியுள்ள மலைகளும் ஓடும் மேகங்களும் சூரிய ஒளியும் அவ்வப்போது இதன் நிறத்தை மாற்றிக் காட்டுகின்றன. இந்த ஏரி ஒரிஸ்ஸாவின் பூரி, குர்தா, கஞ்சம் ஆகிய மூன்று மாவட்டங்களில் பரவிக் கிடக்கிறது. வங்கக் கடலின் நீர் சிறு கடைமுகம் வழியாகப் பாய்ந்து வந்து இந்தப் பெரிய ஏரியை உருவாக்குகிறது.*

*இந்த ஏரியில் பல்விதத் தாவரங்களையும், கொடிய மற்றும் சாதுவான பலவித உயிரினங்களையும் காணலாம். சிலிகா ஏரியில் 150 வகைப் பறவைகளைக் காண முடியும். டௌவிட்சர், ஸ்பூன்பில், சாண்ட் பைப்பர் போன்ற பல அபூர்வ ரகப் பறவைகளை இங்கு காண முடியும். இதனால் 1987ல் ஏரி தேசிய மீன்கள்*



கொள்வதற்கில்லை. வருடத்தில் சில பருவ காலங்களில் தயா, பார்க்கவி, லூனா, கந்தவதி போன்ற நதிகள் இந்த ஏரிக்குள் வேகமாகப் பாய்ந்து இதன் உப்பு நீரைக் கடலுக்குள் தள்ளிவிடுகின்றன. அந்த ஏரியின் நடுப்பகுதியில் காளி ஜெய் தீவிலுள்ள கிணற்று நீர் நல்ல குடிநீராக சுவை உள்ளதாக உள்ளது.

இந்த மாதிரி நல்ல நீர் ஏதோ ஓரிரண்டு இடங்களில் கிடைத்தாலும் ஏரியின் தண்ணீர் உப்புதான். ஏனெனில் கடல் நீர் இதனுள் புகுகிறது. இதனால் பலவித மீன்களும் சில நீர் வாழ் உயிரினங்களும் கடல் நீரோடு இந்த ஏரிக்குள் வந்துவிடுகின்றன. அதனால் இந்த மீன்களைப் பிடித்து விற்று வாழும் குடும்பங்கள் இந்த ஏரியைச் சுற்றி உள்ளன.



பல நூற்றாண்டுகளுக்கு முன் கடல் அரிப்பால் நீர் பெரிய மலையைக் குடைந்து உள்ளே புகுந்ததால்

இந்த ஏரி உருவாகி இருக்கலாம். இதற்குச் சான்று இந்த ஏரியும் கடலும் சேரும் இடத் தில் இரு புறங்களில் இரு குன்றுகள் உள்ளவையே.

இந்த ஏரி உருவானது பற்றிப் பழங்கதை என்பது இருக்கத்தான் இருக்கிறது. ஒருமுறை பூரி ஜெகன்னாத ரின் ஆலயத்தைக் கொள்ளை அடித்துச் செல்ல சில கடல் கொள்ளைக்காரர்கள் வந்தார் களாம். அவர்களது கப்பல் கரையை அணுகியது கண்டு அக்கோவிலின் அர்ச்சகர்கள் கோவில் விக்கிரகங்களையும் அவற்றிற்கு அணிவிக்கும் விலையுயர்ந்த ஆபரணங் களையும் எடுத்துக் கொண்டு தலைமறைவாகி எங்கோ ஒளிந்து கொண்டார்களாம்.

அது மட்டும் அல்ல. அந்த ஊர்க்காரர்களே ஊரைக் காலி செய்துவிட்டு எங்கோ போய்

அருங்காட்சியகமாக அறிவிக்கப்பட்டது.

குளிர்காலத்தில் சைபீரியா போன்ற தொலைதூர இடங் களிலிருந்துகூட பலவிதப் பறவைகள் இங்கு வருகின்றன. மலைகளிலும் மணற்பகுதி களிலும் மான், குரங்கு, பூனை, கீரி ஆகியவையும், கடலோரம் புதர்களில் பாம்பு, ஆமை, பல்லிகளும் காணப்படுகின் றன. கடலும் இந்த ஏரியும் சேரும் இடத்திலுள்ள சதபாரா தீவில் டால்பின்களைக் கூடக் காணலாம்.

நல்பானா இங்குள்ள மிகப் பெரிய தீவு. 10கி.மீ நீளமுள்ள இது மழைக் காலத்தில் நான் கைந்து மாதங்களுக்கு நீரில் மூழ்கியே கிடக்கும். இங்கு சிலரக வௌவால், ஆமை, பாம்புகளும் காணக் கிடைக் கின்றன. மலைப் பகுதியில் கரடி, சிறுத்தை போன்ற வற்றையும் காணலாம்.

இங்கு 150 வித மீன்கள், இறால்களையும் காணலாம். 1917ல் அபூர்வப் பல்லி, பாரக் குடியா தீவில் கிடைத்ததாகக் குறிப்பேடுகள் கூறுகின்றன. இங்கு படகில் சென்றுவர வசதிகள் உள்ளன.

ஒரிஸ்ஸா மாநில சுற்று லாத் துறை பராகூலில் ஏரியில் பல விளையாட்டுப் போட்டி களையும் நடத்தி வருகிறது.



விட்டார்களாம். கடல் கொள்ளைக்காரர்கள் பூரிக்குள் நுழைந்தனர். அவர்கள் எதிர்பார்த்த படி எதுவும் கிடைக்காததால் ஏமாற்றமே அடைந்தார்கள்!

அந்த ஊருக்கு தாங்கள் கொள்ளை அடிக்க வரப் போவதை அந்த ஊர்ககாரர்களுக்கு யார் முன்கூட்டியே தெரிவித்திருப்பார்கள் என்ற அவர்கள் யோசித்துப் பார்த்தார்கள். கடல் தான் அதை அர்ச்சகர்களுக்குக் கூறி இருக்க வேண்டும் என்றும் அர்ச்சகர்களில் ஒருவர் கடல் அலைகள் கூறியதைக் கண்டுபிடித்திருக்கிறார் என்றும் கடல் கொள்ளைக்காரத் தலைவன் ஊகித்துவிட்டான்.

கொள்ளைக்காரர்கள் கடற்கரைக்குத் திரும்பிச் சென்று அங்கு நின்று கடலைத் திட்டி நொறுக்கிவிட்டுக் கப்பலில் ஏறிப் புறப்பட்டார்கள். கடலோ கோபம் கொண்டு உயரமான



அலைகளை எழுப்பி அவர்களது கப்பல்களை உடைத்தது. கொள்ளைக்காரர்கள் கடலில் மூழ்கி இறந்து போயினர்.

இதன் பிறகு கடல் கோபம் தணிந்து வடிந்தது. அப்போது அதன் ஒரு சிறு பகுதி கரையிலேயே இருந்துவிட்டது. அதுவே சிலிகா ஏரியாக மக்களுக்குப் பெரிதும் பயன் பட்டு வருகிறது.

பல நூற்றாண்டுகளுக்கு முன் இந்த ஏரி இப்போது இருப்பதைவிட மிகப் பெரிதாக இருந்து கப்பல்கள் வந்து போக வசதியாக இருந்தது. இதனை நான்காவது நூற்றாண்டில் இந்தியா வந்த கிரேக்கப் பயணி தோலமி தன் பயணக் குறிப்புகளில் எழுதி வைத்திருக்கிறார். இவருக்குப் பிறகு இந்தியாவிற்கு வந்த சீன யாத்திரிகர் ஹுவான் சங் இந்தத் துறைமுகத்திற்கு வந்து இதனை

## ஏரியின் கவர்ச்சிகரமான இடங்கள்

பறவைத்தீவு :

இங்கு பலவிதப் பறவைகள் வந்து கூடுகின்றன. அவற்றைக் காணக்காண பொழுது போவதே தெரியாமல் இருந்துவிடும்.

காளிஜெய் தீவு :

இங்கு காளிஜெய் ஆலயம் உள்ளது. இங்குள்ள தேவிக்கு மகர சங்கிராந்தியின்போது விழா நடத்தப்படுகிறது. பொழுது போக்கு இடமாய் சுற்றுலாப் பயணிகள் இங்கு வருகிறார்கள்.

சதபாரா :

சதபாராத் தீவு வங்கக் கடலும் சிலிகா ஏரியும் சேரும் இடத்தில் அமைந்துள்ளது. சிலிகா ஏரியைக் கண்டு களிக்க ஏற்ற இடம் இதுவே. ஆண்டு முழுதும் டால்பின்களையும் குளிர்காலத்தில் பல நாடுகளிலிருந்து வந்து இங்கு தங்கிச் செல்லும் பறவைகளையும் கண்டு களிக்கலாம். படகுகளில் ஏரியில் சுற்றி வரவும் இங்கு வசதிகள் செய்யப் பட்டுள்ளன.



செல்லித்தோ எனக் குறிப்பிட்டிருக்கிறார். சில அறிஞர்கள் இதை தந்தபுரம் என பௌத்த சமய நூல்களில் குறிப்பிட்டு உள்ளதாகச் சுட்டிக் காட்டுகிறார்கள்.

இதில் நூற்றுக்கணக்கில் திட்டுகளும் தீவுகளும் உள்ளன. தீவுகளில் ஒன்று தீபபஹாம். இதன் உச்சியில் ஏற்றப்படும் விளக்கு இதனைக் கப்பல் களுக்கு கலங்கரை விளக்கமாக ஆக்குகிறது. பரிகுட் என்கிற தீவு தான் இங்கு மிகப் பெரியது. இது ஒரு சிறு நாடாக ஒரு மன்ன னால் ஆளப்பட்டது. ஆனால் காளிஜெய் என்ற தீவு புனிதத் தலமாய் மக்களை ஈர்த்து வருகிறது. இங்கு காளிஜெய் தேவியின் ஆலயம் உள்ளது. காளிஜெய் என்ற பெயர் வரக் காரணம் என்ன என்று இருவிதக் கதைகள் கூறப்படு கின்றன. பரிகுட் என்ற நாட்டு மன்னனின் குல தெய்வம் காளி. ஒருமுறை இந்நாட்டு மன்னனை வலிமை மிக்க வேறொரு மன்னன் தாக்கி நாட்டை அபகரிக்க வந்தான். பரிகுட் மன்னன் தன் நாட்டை காத்தருளும்படி காளி தேவியை வேண்டினான்.



எதிரியின் படை ஏரிக் கரைக்கு வந்துவிட்டது. மறுநாள் காலை படகுகளில் சென்று பரிகுட் தீவை தாக்குவதுதான் அதன் திட்டம். ஆனால் காலையில் பரிகுட் தீவின் கரையில் ஆயிரக்கணக்கான வீரர்கள் நிற்பது கண்டு எதிரியான மன்னன் திகைத்து போனான். இதை அந்த மன்னன்

எதிர்பார்க்கவில்லை. அதனால் பரிகுட்டைத் தாக்க பயந்து பின்வாங்கிவிட்டான்.

பரிகுட் மன்னன் எதிரியின் படை திரும்பிப் போவதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். அங்கு ஆயிரக்கணக்கில் கொக்குகள் இருந்தன. அவற்றைப் போர் வீரர்களாக எண்ணித்தான் எதிரி பின்வாங்கி விட்டான் என்று மன்னன் எண்ணி இது காளிதேவியின் அருளே என்று உறுதியாக நம்பினான். அதனால் வெற்றி காளிதேவியின் அருளாலே என் எண்ணி ''காளிஜெய்!'' என்று கூவினான். அதனால் அத்தீவிற்கு அந்தப் பெயர் ஏற்பட்டதாம்.

மற்றொரு கதையின்படி காளிஜெய் என்ற பெண் சிலிகா ஏரியின் பக்கத்திலுள்ள ஒரு கிராமத்தில் வசித்து வந்தாள். அவள் கடவுளை வணங்குவதையும் முதியோருக்கும் நோயாளிகளுக்கும் பணிபுரிவதையும் தன் கடமையாகக் கருதினாள். அவளை யாவரும் விரும்பினார்கள். அவளது முகத்தில் கருப்பு நிறம் ஒரு ஓரத்தில் இருந்ததால் அவள் காளிஜெய் என்ற பெயர் பெற்றாள். அவளுக்குத் திருமணம் செய்து வைக்க உறவினர்கள் நிச்சயித்து ஒரு தீவிலுள்ள இளைஞனை அவளது உறவினர்கள் தேர்ந்து எடுத்தார்கள். ஆனால் காளிஜெய்யோ தான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று கூறினான்.

ஆனால் அவளது தந்தையும் உறவினர்களும் அதை லட்சியம் செய்யாமல் திருமண ஏற்பாடுகளை கவனிக்க லானார்கள். அவர்கள் அவளை ஒரு படகில் ஏற்றிக் கொண்டு

மணமகன் இருக்கும் தீவிற்குச் செல்லலானார்கள். காளிஜெய் எதுவுமே பேசாமல் படகில் ஓர் ஓரத்தில் உட்கார்ந்திருந்தாள். அதுவரை மெதுவாக வீசிக் கொண்டிருந்த காற்று திடீ ரெனக் கடும் புயலாக மாறி யது. பெரிய அலைகள் எழும்பின. மழை பெய்தது. இடி இடித்தது. மின்னல் வெட்டியது. படகோ மேலும் கீழுமாய் அங்கும்இங்குமாகப் போய் ஆடியது. பிறகு அது கவிழ்ந்துவிட்டது.

உடனே புயல் நின்றது. மழையும் ஓய்ந்தது. அமைதி நிலவியது. படகிலிருந்து ஏரி யில் விழுந்தவர்கள் நீந்தித் தீவின் கரையை அடைந்து விட்டார்கள். ஆனால் காளி ஜெய் மட்டும் தென்பட வில்லை. அவளது தந்தையும் உறவினர்களும் "காளிஜெய்! எங்கிருக்கிறாய்? வா இங்கே!"

## செல்வதற்கு ஏற்ற சமயம்

சிலிகா ஏரிக்குச் செல்ல ஏற்ற சமயம் குளிர்காலம். அப்போது அங்கு பலவிதப் பறவைகளின் இனிய குரல் ஒலிகளைக் கேட்டு ரசிக்கலாம். ஏரியில் படகில் சுற்றி வர படகுகளை பாலுகாம், பர்கூல், ரம்பா ஆகிய இடங்களில் வாட கைக்கு அமர்த்திக் கொள்ள முடியும். நீங்கள் அங்குள்ள மீனவர் களை வற்புறுத்தி அவர்களது கட்டுமரங்களில் அமர்ந்துகூட ஏரியைச் சுற்றிப் பார்க்க முடியும்.

## சுற்றுலாக்கள்

நிர்மலாஜார் :

ரம்பாவிலிருந்து 11 கி.மீ தொலைவிலும் பர்கூரிலிருந்து 21 கி.மீ தொலைவிலும் அமைந்துள்ள இது ஒரு புனிதத்தலம். பொழுது போக்கவும் சுற்றுலாப் பயணிகள் இங்கு வருகிறார்கள்.

நாராயணி :

பர்கூரிலிருந்து 10 கி.மீ தொலைவிலுள்ள நாராயணி தேவியை தரிசிக்க பக்தர்கள் வருகிறார்கள். இந்த ஆலயமும் இதன் அழகிய சுற்றுப்புறமும் சுற்றுலாப் பயணிகள் மனதைக் கவர்கின்றன.

பாண்புர் :

இங்குள்ள பகவதி அம்மன் ஆலயமும் தக்ஷப் பிரஜாபதி ஆல யமும் யாவரையும் கவர்ந்து இழுக் கின்றன. இது பர்கூரிலிருந்து 13 கி.மீ தொலைவிலும் பாலுகாமி லிருந்து 8 கி.மீ தொலைவிலும் உள்ளது.

என்று உரக்கக் கூவினர். பதில் கிடைக்காததால் அலைந்து தேடினார்கள். ஆயினும் அவள் காணப்படவில்லை.

அப்போது படகில் அங்கு வந்த சில மீனவர்கள் ''கடும் புயல் அடித்தபோது எங்கள் படகை ஏதோ ஓர் அபூர்வ சக்தி தள்ளிக் கொண்டு வந்து பத்திரமாய் இந்தக் கரையில் கொண்டு வந்து விட்டது. அது பெண் வடிவில் இருந்தது. அது அநேகமாக காளிஜெய்யின் ஆவியாகத்தான் இருக்க வேண்டும்,'' என்றனர். ஆம், காளிஜெய் இறந்தபிறகும் பிறருக்கு உதவி னாள். அப்போது முதல் காளிஜெய் தெய்வமாகக் கருதப் பட்டாள்.

காளிஜெய்க்கு மகரசங்கராந்தியின் போது விழா எடுக்கப் படுகிறது. இது மாசி மாதத்தில் நடை பெறுகிறது. அச்சமயம் ஆடுகளையும் காடைப் புறாக்களையும் இத்தேவதைக்கு



பக்தர்கள் அர்ப்பணிக்கிறார்கள். ஆனால் அவற்றைப் பலி யிடுவது இல்லை. வழிபாடு முடிந்தபின் அவற்றை அங் குள்ள காடுகளுக்குள் ஓட்டி விடுகிறார்கள். இவற்றை காளிஜெய்யின் கோவிலைச் சுற்றிலும் கூடக் காணலாம்.

காளிஜெய்யை மக்கள் வழி பட்டு வருவது என்னவோ சரி தான். ஆனால் ஏரியை மாசு படுத்தாமல் சுத்தமாக வைத் திருக்கிறார்களா என்பது தான் கேள்வி நன்கு திட்டமிட்டு இந்த ஏரியைப் பராமரித்து வந்தால் உலகிலேயே மிக அழகான கண்கவர் இடமாக விளங்கக் கூடும். இது கடலில் சேரும் இடத்தில் நின்று சூரிய உதயத்தைப் பார்த்தால் கண் கொள்ளாத காட்சியாக இருக் கும். மற்ற நேரங்களில் கடலில் எழும் அலைகளும் ஏரியில் பரந்த அமைதியான நீர்ப்பரப்பும்

## இதனை அடைய வழி

சிலிகா ரயிலாலும் சாலை களாலும் இணைக்கப்பட்டுள்ளது. விமானம் வாயிலாக செல்ல புவனேஸ்வர் விமான தளத்தில் இறங்க வேண்டும். இங்கிருந்து பர்கூல் 150 கி.மீ., ரம்பா 130 கி.மீ., சத்பாரா 110 கி.மீ. தொலைவிலும் உள்ளன. இந்தியன் ஏர்லைன்ஸ் டில்லி, கோல்கத்தா, விசாகப் பட்டணம், ராய்புர், ஹைதராபாத், மும்பை, சென்னை ஆகிய இடங் களிலிருந்து இது வரை விமானப் போக்குவரத்தை செய்துள்ளது.

தென்கிழக்கு ரயில்வேயில் கோல்கத்தா - சென்னை பாதையில் செல்லும் ரயில்களில் பாலு காமிலோ, சிலிகா, காளி கோடே, ரம்பா ஆகிய ரயில் நிலையங்களில் ஏதாவது ஒன்றில் இறங்கி இதனை அடையலாம். பர்கூல் செல்ல மிக அருகிலுள்ள ரயில் நிலையம் பாலு காம் (5 கி.மீ) சத்பாராவை அடைய புரி ரயில் நிலையம் (50 கி.மீ).

சென்னைக்குச் செல்லும் தேசிய நெடுஞ்சாலை எண் 5 கோல் கத்தா, கட்டக், புவனேஸ்வர் பாலு காம், பர்கூல், ரம்பா, பெர்ஹம்புர், விசாகப்பட்டணம் ஆகிய வற்றை இணைக்க இந்த ஏரி வழி யாகத் தான் செல்கிறது. ஒரிஸ்ஸா மாநிலச் சுற்றுலாத் துறையும், தனி யார் நிறுவனங்களும் கார், சொகுசு வாகனங்களைப் பூரி, புவனேஸ் வரிலிருந்து இதற்குச் செல்ல ஏற்பாடு செய்து தருகிறார்கள்.

சுற்றிலும் உள்ள பசுமையான காடுகளும் குன்றுகளும் மேகங்களின் அசைவும் கண்கொள்ளாக் காட்சியாகும்.

இந்த ஏரியைச் சுற்றியுள்ள பகுதிகள் வரலாற்றுச் சிறப்பு மிக்கவை. இதனருகே உள்ள பாண்புர் பழங்காலத்து கான் காட் நாட்டின் தலைநகராக இருந்தது. பல மன்னர்கள் இந்த ஏரியின் தீவுகளில் பல ஆலயங்களைக் கட்டி, வழிபாட்டிற் கான ஏற்பாடுகளையும் செய்திருந்தனர். இந்த ஏரியின் கரையில் நடக்கநடக்க பசி, தாகத்தைக் கூட மறந்து இயற்கை அழகை ரசித்துக் கொண்டே இருக்க முடியும்.

இந்த ஏரி அளித்த ஊக்கத்தால்தான் ஒரிஸ்ஸாவின் மாபெரும் கவிஞர்கள் எல்லோரும் தம் படைப்புகளை மக் களுக்கு அளித்தார்கள் என்றே கூறலாம். அவர்களில் தற்கால ஒரியா இலக்கியத்தை உருவாக்கியவர்களுள் ஒருவரான மாபெரும் கவிஞர் ராஜ்நாத் ராயைக் குறிப்பிடலாம். இவர் இந்த ஏரியைப் பற்றி எழுதியது மாபெரும் காவியமாகி விட்டது. இந்த ஏரியைப் பற்றி உயரிய கவிதை புனைந்த



மற்றொரு கவிஞர் கோபபந்து தாஸ். இவரது இயற்கை வர்ணனையைப் பற்றி எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். இவ்வரிசையில் வரும் மற்றொரு கவிஞர் கோதாவரீசமிஸ்ரா. இவர் காளிஜெய்யின் புகழ் பாடியுள்ளார்.

இங்கு வருபவர்கள் இந்த ஏரியை மேலோட்டமாகப் பார்க்காமல் இதன் வாயிலாக இயற்கையின் பல அழகிய காட்சிகளைக் கண்டு ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். இந்த ஏரிக்கு உள்ள பல சிறப்புகளில் ஒன்று கொள்ளையர்கள் ஜகன்னாதரின் ஆலயத்தைக் கொள்ளையடிக்க வந்தபோது விக்கிரகங்கள், ஆபரணங்களை எடுத்து வந்த அர்ச்சகர்களுக்குப் புகலிடம் அளித்ததாகும். கடவுளுக்கே தஞ்சமளித்த இந்த ஏரி மன உளைச்சலால் அவதிப்படும் மக்களுக்கு கண்டிப்பாக மன நிம்மதியை அளிக்கும்.



## எங்கு தங்குவது

ஏரியைச் சுற்றிலும் தங்க வசதியான இடங்கள் கிடைக்கின்றன. சில ஹோட்டல்கள் ஒரிஸ்ஸா மாநிலச் சுற்றுலாத் துறையால் நடத்தப்பட்டு வருகின்றன. தனியார்கள் பல ஹோட்டல்களை இங்கு வைத்திருக்கிறார்கள்.



## சுற்றுலாப் பயணிகளுக்கு உதவி

ரம்பா சுற்றுலாத் துறை அலுவலகம், கர்கூல்.

புரி சுற்றுலாத்துறை அலுவலகம், விஐபி சாக்.

# இயற்கையை அறிய மையம்

சிலிகா ஏரியின் சதபாராவிலுள்ள பார்வையாளர் மையத்திற்கு ஒவ்வொரு சுற்றுலாப் பயணியும் சென்றே வர வேண்டும். இது சிலிகா ஏரியும் வங்கக் கடலும் சேரும் இடத்தில் உள்ளது. இது ஒரு சிறு அருங்காட்சியகமே. இதில் ஏரியின் இயற்கை வளம் சுற்றுப்புறம் ஆகியவை அழகிய படங்களாலும் நீர்வாழ் உயிரினங்களின் அருங்காட்சியகத்தாலும் ஒளி, ஒலி நாடாக்களாலும் நன்கு விளக்கப் படுகின்றன. சிறுவர்கள் கண்டறியத் தனி அறை ஒன்று இங்கு உள்ளது. இப்படி விளக்குவதின் நோக்கமே சுற்றுப்புறச் சூழலின் உயர்வை மக்களுக்கு எடுத்துக் காட்டி அவற்றை அழிக்காமல் பாதுகாக்க வேண்டியது, எவ்வளவு அவசியம் என்பதுதான்.

சுற்றுலாப் பயணிகள் மேலும் வசதியாக இவற்றை அறிந்து கொள்ள கம்ப்யூட்டர்கள் வாயிலாக படங்கள் குறிப்புகள் தரப்படுகின்றன. இவற்றில் பல வகைத் தாவர வகைகளையும் பறவைகளையும், மற்ற உயிரினங்களையும் கண்டு பல பதிய விஷயங்களையும் பார்த்தும் கேட்டும் அறிந்து கொள்ளலாம். குழந்தைக்களுக்கான புதிர்கள், விளையாட்டுகள் இங்கு இருப்பதால் வேடிக்கையாகவே பல விஷயங்களை அவர்கள் தெரிந்து கொள்ள முடிகிறது.



# Touch Orissa to feel India

## Culture



Flowing through the arteries of Orissa, is the living and continuing culture of India... its varied expressions and its rich variety. The very stones speak of the unique history of the nation. The temple-culture condenses the quintessence of India. Whether it is the sacred environs of Lord Jagannath temple, or the eroticism of Konark's Sun temple, the wondrous caves of Jainism or the mystical monasteries of Buddhism, the paintings of folklore or the weaver's magic... Orissa speaks eloquently of a living past and continuing present. The rhythmic and exotic classical 'Odissi dance' evolved from the cult of the 'devadasis' or female temple dancers reverberates not only within the portals of the nation, but also echoes on foreign shores too. Folk dances like the 'Chhow' or the 'Sambalpuri' dance and tribal dances like the 'Ghumura' & 'Paraja' can set any soul ablaze. Indigenous theatre in the form of 'Prahalad-Nataka' or the 'Dhanuyatra' are expressions of the 'Indianness of India'. Fairs like the 'Bali Jatra' remind us of our ancient maritime links with Bali. And to crown it all is our universally-acclaimed 'Rathyatra' of Lord Jagannath which has infected the world. So... sure and true flows the Orissan culture reflecting the Indian Culture.

**Orissa**
The Soul of India




Visit Orissa - Experience India.

**For more information contact**: Director, Tourism; Paryatan Bhavan; Bhubaneswar-751014, Orissa, India Tel: (0674) 2432177, Fax: (0674) 2430887, e.mail:ortour@sancharnet.in, website:www.orissa-tourism.com Tourist Offices at; **Chennai:** Tamilnadu Tourism Complex, Ground Floor, Near Kalaivanar Arangam Wallajah Road, Chennai - 600002, Ph: (044) 25360891, **Kolkata**: Utkal Bhawan 55, Lenin Sarani, Pin-700013 Tel: (033) 22443653, **New Delhi:** Utkalika, B/4 Baba Kharak Singh Marg, Pin - 110001, Telefax (011) 23364580







# *Face to Face with Nature*

*CHILIKA - the hopping , Singing and flying nursery for children. This lazy and dreamy Chilika lake dwells in the East Coast of Orissa. When in Chilika, you are in nature's class-room, being taught the alphabets of nature. "This is a dolphin" and "That is a heron" - a live picture book for kids. Parents take note: Open the eyes of your children to this special page of ever-gathering beauty. Chilika is the wintering ground for migratory birds. Colours and varied shapes shall tickle the imagination of young minds. In boats one can go exploring little fairylands - the exciting islands. Water sports adds to the existing excitement for kids and men with young hearts. In the middle of this clear, dark blue lake stands the famous 'Kalijai temple'. The story of Kalijai will chase tender hearts like a dream. Capture the talkative beauty and bounty of the gorgeous Chilka in your dead film reels and immotalise the moments of fleeting beauty in the hearts of your young ones.*



**For more information contact**: Director, Tourism; Paryatan Bhavan Bhubaneswar-751014, Orissa, India, Tel: (0674) 2432177, Fax: (0674) 2430887 e.mail:ortour@sancharnet.in, website:www.orissa-tourism.com

Tourist Offices at; **Chennai:** Tamilnadu Tourism Complex, Ground Floor Near Kalaivanar Arangam, Wallajah Road, Chennai - 600002 Ph: (044) 25360891, **Kolkata**: Utkal Bhawan 55 Lenin Sarani, Pin-700013, Tel: (033) 22443653 **New Delhi:** Utkalika, B/4 Baba Kharak Singh Marg, Pin - 110001 Telefax (011) 23364580







**Orissa**

The Soul of India

# இருட்டிலிருந்து வெளிச்சத்திற்கு



அனுபா
மோஹந்தி,
கட்டக்



ஐஸ்வர்யா
கணேசன்,
போபால்

ஒருநாள் இரவு நான் கண்ணயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கையில், ஒரு சத்தம் கேட்டு எழுந்திருந்தேன். வெளியே ஒரே இருள். வானில் நிலவும் இல்லை. மின்சாரம் இல்லாததால் வீடும் இருளாக இருந்தது.

திடீரெனப் பார்த்தால் இரண்டு உருவங்கள் என்னை நெருங்கிக் கொண்டிருந்தன. நிச்சயம் இது பேய் அல்லது ஆவி என்று பயத்திலே நான் உறைந்து போனேன்.

பயத்தினில் கண்களை இறுக மூடிக்கொண்டேன். மெதுவாக எங்கிருந்தோ மெல்லிய இசை டேப் ரிகார்டரிலிருந்து வர ஆரம்பித்தது. வீட்டில் மின்சாரம் இல்லாத போது, டேப்ரிகார்டர் எப்படி ஒலிக்கும் என்று ஆச்சரியத்துடன் கண்களை இலேசாகத் திறந்தால், தூக்கிவாரிப் போட்டது. சிறிய ஒளி வட்டங்கள் மெலிதாக தூரத்தில் தோன்ற, அந்த இரண்டு பேய் உருவங்களும் என்னை நோக்கி வந்து கொண்டு இருந்தன.

திகிலின் எல்லைக்கே வந்து கூச்சலிட நான் நினைத்தபோது, அந்த அதிசயம் நிகழ்ந்தது. நான் கேட்ட இசையொலி ''உனக்கு பிறந்த நாள் வாழ்த்துக்கள்!'' என்ற இசையாகக் கேட்டது.

அந்த ஒளி வட்டங்கள், பதின்மூன்று மெழுகுவர்த்திச் சுடரிலிருந்து வந்தன. என்னை நெருங்கிய அந்த இரண்டு உருவங்களும், வேறு யாரும் இல்லை. என் பெற்றோர்களே!

அப்போதுதான் புரிந்தது. எனது 13வது பிறந்தநாளை நடு இரவு 12 மணிக்கே கொண்டாட எனது பெற்றோர்கள் எனக்குத் தெரியாமல் இரகசியமாகச் செய்த ஏற்பாடு என்று.



# சிறப்பான பிறந்தநாள் விழா



ப்ரியம் பராஷார், ஜபல்பூர்

ஒருநாள் இரவு 9 மணி அளவில், ருசியும் தீபக்கும் வீட்டில் தங்கள் பாட்டியுடன் இருந்தனர். அவர்களது பெற்றோர் வெளியில் சென்றிருந்தனர். அன்று நவம்பர் 19ந் தேதி. மறுநாள் பாட்டியினுடைய பிறந்தநாள். பாட்டிக்கு 89 வயது நிரம்புகிறது. குழந்தைகள் பாட்டியை ஒரு கதை சொல்லும்படி வேண்டினார்கள். முதலில் மறுத்தாலும், பாட்டி பின் கதை சொல்லத் தயாரானாள்.

''குழந்தைகளே, நான் சிறுமியாக இருந்தபோது என்னுடைய பாட்டி எனக்கு சொன்ன, அன்பினால் மனம் திருந்திய ஒரு பெண்ணின் கதையை இப்போது உங்களுக்குக் கூறுகிறேன்.'' என்று ஆரம்பித்தாள்.



''மேரிகார்மல் என்ற ஒரு பெண் தனது கணவனுடன் வசித்து வந்தாள். உற்சாகமாயிருந்த அந்தப் பெண். இராணுவத்தில் பணிபுரிந்த தனது கணவன் இறந்த பிறகு, முற்றிலும் மாறிப் போனாள். அவளுக்கு குழந்தைகள் இல்லாததினால், வாழ்க்கையிலும் தன்னைச் சுற்றியுள்ளவர்கள் அனைவர் பேரிலும் ஒரு வெறுப்பு உண்டாகிவிட்டது. ஆனால் மற்றவர்கள் என்னவோ வழக்கப்படி அவளிடம் அன்பாகவே இருந்தனர்.''

''வாழ்க்கையின் மேல் ஏற்பட்ட வெறுப்பினால், பொது நிகழ்ச்சிகளுக்கு செல்வதை நிறுத்திக் கொண்டாள். யாராவது அவளை பிறந்தநாள் போன்ற நிகழ்ச்சிகளுக்கு அழைத்தாலும் அவள் எங்கும் போவதில்லை.

இப்படி பல நாட்கள் வீட்டிலேயே அடைந்து கிடந்தபின், தனது பிறந்த நாளன்று வெளியில் செல்லத் தீர்மானித்தாள். அவளைக் கண்டவர்கள் எல்லாம் 'வணக்கம்' என்று சொன்னார்கள். இவர்கள் எல்லோரும் நம்மை நேசிக்கிறார்கள். இவர்களது





கே.வி. நந்தன், சென்னை

அன்பினை நான் புறக்கணித்து விட்டேன். தவறு என் மீதுதான் என்று யோசிக்கலானாள்.

இவ்வாறு யோசித்துக் கொண்டே, இரவு 8 மணிக்கு தன் வீடு திரும்பினாள். அவளுக்கு அங்கே ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. எப்படியோ அவளது பிறந்தநாளைத் தெரிந்து கொண்ட மற்றவர்கள் பரிசுகளுடன் அவளுக்காக காத்திருந்து, அவளைக் கண்டதும் பிறந்த நாள் வாழ்த்துக் கூறி, கேக் வெட்டி அவளுக்கு பரிசு களை வழங்கினார்கள்.

இதையெல்லாம் சற்றும் எதிர் பாராத மேரி அவர்கள் அன்பினைக் கண்டு மனமுருகிப் போய் அவர் களிடம் தான் இதுநாள் வரை நடந்து கொண்டதற்கு மன்னிப்புக் கோரி னாள். அன்றுமுதல் எல்லாரிடமும் சுமுகமாகப் பழக ஆரம்பித்தாள்,'' என்று கூறி பாட்டி கதையை முடித் தாள். குழந்தைகள் பாட்டியிடம் விடைபெற்றுத் தூங்கச் சென்றனர்.

மறுநாள் இரவு 9 மணி வரை வீட்டில் எல்லாம் வழக்கப்படியே நடந்தன. டி.வி. நிகழ்ச்சி பார்க்க அங்கு வந்த பாட்டி விளக்கைப் போட்டவுடன் அலமாரி, டி.வி. பெட்டி பின்புறமிருந்து குழந்தைகள் திடீரென வெளிப்பட்டு கையில் கேக்குடன் பாட்டிக்கு பிறந்தநாள் வாழ்த்துப் பாட்டு பாடிக் கொண்டே வந்தனர். பிறந்த நாள் கேக், விருந்து ஆகியவை முடிந்த பின் பாட்டிக்குப் பரிசுகளும் கொடுத் தனர். குழந்தைகளின் பெற்றோர்கள் ஓர் அழ கிய சால்வையைப் பரி சளிக்க குழந்தைகள் ஒரு பரிசுப் பெட்டியை கொடுத்தனர்.

அதன் மீது ''ருசி, தீபக்கிடம் இருந்து, 89 வயது நிரம்பிய எங் கள் அன்பான கதை சொல்லும் பாட்டிக்கு'' என்று எழுதப்பட்டு இருந்தது. அந்தப் பரிசுப் பெட்டிக் குள் ஒரு பொம்மை பரிசு இருந்தது. அவர்களது அன்பினைக் கண்ட பாட்டியின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் துளிர்த்தது.







# சுதந்திரத்தின் மதிப்பு



பி. கார்த்திக் ராமசாமி, சென்னை

"அப்பா, தயவு செய்து எனக்கு வீட்டில் வளர்க்க கிளி வாங்கிக் கொடேன்,'' என்று நான் கெஞ்சினேன். இதுபோல் இரண்டு மாதங்களாகவே, அப்பாவைக் கேட்டுக் கொண்டு இருக்கிறேன்.

தெருவில் ஒருநாள் கிளி, மைனா போன்ற பறவைகளை விற்ற ஒருவனைப் பார்த்திலிருந்து, வீட்டில் அழகான கிளி வளர்க்க வேண்டும் என்ற ஆசை எனக்குள் வேரூன்றி விட்டது. ஒரு ஜோடி அழகான கிளி வாங்கி கூண்டில் வைத்து வளர்ப்பது போலவும், தினம் எழுந்து அவற்றைப் பார்த்து பேசி அவைகளுக்கு உணவு அளித்து பேசக் கற்றுக் கொடுப்பது போலவும் விதவிதமான கனவு காணத் துவங்கிவிட்டேன்.

என் படிப்பு கெட்டுப் போகும் என்றும், தவிர வீட்டில் கிளி வளர்ப்பதால் பிற தொந்திரவுகள் ஏற்படும் என்றும் என் பெற்றோருக்கு கிளி வளர்ப்பதில் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. என்னுடைய பிடிவாதத்தின் பேரில் கடைசியில் ஒரு வழியாய் சம்மதித்தனர்.

ஒருநாள் அழகான ஒரு ஜோடி பச்சைக் கிளிகள் வாங்கி அவற்றைக் கூண்டில் வைத்து மகிழ்வுடன் வீடு திரும்பினேன். அம்மாவுடன் கலந்தாலோசித்து கிளிகளுக்கு இயற்கையாக இருக்க வேண்டும் என பின்பக்க பால்கனியில் ஏற்கனவே இருந்த தொட்டிச் செடிகளின் பக்கம் கிளிக் கூண்டைத் தொங்க விட்டேன்.

பிறகு வேண்டுமென்றே "அம்மா, வண்ண மீன்கள் வாங்கி கண்ணாடித் தொட்டியில் வைத்து நம் வீட்டில் வளர்த்தால் நன்றாக இருக்கும்,'' என அம்மாவைச் சீண்டினேன். பதிலே பேசாமல் அம்மா சென்றுவிட்டாள்.

மறுநாள் எல்லாருக்கும் முன்னதாக நான் காலையில் படுக்கையிலிருந்து எழுந்து கிளிகளைப் பார்க்கப் போனேன். நான் இவ்வளவு சீக்கிரம் எழுந்து பார்த்ததேயில்லை என்று அம்மா குறிப்பிட்டாள். கிளிகளுக்கு டினு, மினு என்று பெயர் கொடுத்திருந்தேன். அவைகளைச் செல்லமாக பெயரிட்டு அழைத்து, பழம் உண்ணக் கொடுத்துவிட்டு, ஸ்கூல் செல்லத் தயாரானேன்.

மாலை என் செல்லக் கிளிகளுடன் கொஞ்ச நேரம் விளையாடிவிட்டு, படிக்கப் போனேன். மனதுக்குள் பரபரப்பாகவும், சந்தோஷமாகவும் இருந்தது.

இவ்வாறு 3 நாள் கழிந்தன.





ஸயான் சந்தா,
கொல்கத்தா

கிளிகள் தங்களைப் புதிய சூழ்நிலைக்கு பழக்கப்படுத்திக் கொண்டிருந்தன. இருப்பினும் அவற்றின் கண்களில் ஓர் ஏக்கத்தை என்னால் காண முடிந்தது.

நான்காம் நாள் இரவு ஓர் அதிசயம் நடந்தது. வீட்டில் ஸ்கூல் வேலைகள் செய்து முடிக்க வெகு நேரமாகிவிட்டது. திடீரென டினுவும் மினுவும் கூண்டைத் தன் அலகுகளால் குத்திக் கொண்டு ''எங்களுக்கு சுதந்திரம் வேண்டும். எங்களை வெளியே விடு!'' எனக் கீச்சிட்டன.

நிஜமாகவே கிளிகளின் கண்களில் கண்ணீர் வரக் கண்டேன். ''என்னை மன்னித்துவிடுங்கள். இனி உங்களை இப்படி துன்புறுத்த மாட்டேன்,'' என்று நான் அழ ஆரம்பித்தேன்.

''என்ன ஆயிற்று உனக்கு?'' என்று என்னை அம்மா எழுப்பியபின் தான் இது ஒரு கனவு எனத் தெரிந்தது. இது ஒரு கனவானாலும் எனக்கு ஒரு நல்ல பாடமாக அமைந்தது.

மறுநாள் ஒரு கூண்டுடன் அவற்றைப் பக்கத்திலுள்ள ஒரு பூங்காவிற்கு அழைத்துச்சென்று, கூண்டைத் திறந்து அவைகளை வெளியே சுதந்திரமாகப் பறக்கவிட்டேன். கிளிகளின் கண்கள் நன்றியுடன் பிரகாசிக்க மகிழ்ச்சியுடன் அவை பறந்து விட்டன. ''அடுத்து நாம் மீன் வளர்க்கலாமா?'' என்று அம்மா கேலியாக என்னைக் கேட்டார்.

அதற்கு ''இல்லை அம்மா! மீன்கள் சுதந்திரமாக நதியிலும், ஏரியிலும் நீந்தட்டும். அவற்றை நம் வீட்டுக் கண்ணாடித் தொட்டியில் சிறைப்படுத்தக்கூடாது. இனி நான் எனது சிறுசேமிப்புப் பணத்தில் கூண்டுப் பறவைகளையும், சங்கிலியால் கட்டப்பட்ட மிருகங்களையும் வாங்கி அவற்றை சுதந்திரமாக விட்டு விடுவேன்,'' என்றேன். அதைக் கேட்ட என் அன்னை மிக மகிழ்ச்சி அடைந்தாள்.



# உயிருள்ள பொருள்கள்



பிராதா
உமேஷ் மேத்தா,
கோவா

ஒரு காலத்தில் தாவரங்கள் உயிரற்றவை எனக் கருதப்பட்டன.

அவற்றுக்கும் உயிர் உண்டு என்பது பின்னர் விஞ்ஞானிகளால் கண்டுபிடிக்கப்பட்டது. இதைப்பற்றி தாதாஜி ஜினாலிடம் சொன்னவுடன், ஜினால் "உயிர் அற்றவை என நாம் நினைப்பது எல்லாம் உயிருள்ளவை. நாம் நமது அறிவீனத்தால் அவ்வாறு கருதுகிறோம்," என நினைத்தாள்.

அதன்பின், ஜினால் உயிரற்ற ஜடப் பொருள்களையும் உயிருள்ள உணர்ச்சியுள்ள உயிரினங்களாக நடத்த முயற்சி செய்தாள்.

என்னதான் முயற்சி செய்தாலும், கல் கல்லாகவும், மரம் மரமாகவுமே





பிராதா உமேஷ் மேத்தா, கோவா

இருந்தன. அவற்றுக்கு உணர்ச்சிகள் என்று ஒன்று இருப்பதாகவே தெரியவில்லை.

இதை சிறிதும் பொறுக்காத ஜினால் கடைசியில் தனது தவறுக்காக அழ ஆரம்பித்தாள். திடீரென்று ''அழாதே!'' என ஒரு குரல் கேட்டது.

''யார் பேசியது?'' என்று சுற்றும் முற்றும் பார்த்தால் மேஜை, நாற்காலி, மின்விசிறி, பெட்டி மற்றும் இதர பொருட்கள்... இவற்றைத் தவிர அந்த அறையில் வேறு யாருமில்லை.

ஒருவேளை தாதாஜி பேசியிருப்பாரோ என்று பார்த்தால் அவரும் உறங்கிக் கொண்டிருந்தார்.

ஒருவேளை, ஏதாவது ஒரு பிசாசு அல்லது பேயினுடைய குரலோ என்று எண்ணி பயந்துபோய் ஜினால் திரும்பவும் அழ ஆரம்பித்தாள். மறுபடியும் ''அழாதே, குழந்தை'' என்ற குரல் கேட்டது.

ஜினால் கேட்டாள், ''யார் நீ? எங்கேயிருக்கிறாய்?''

''நான் உன் முன்னாலேயே இருக்கிறேன், பார். நான்தான் காற்று,'' என்றது.

ஜினால் மகிழ்ச்சியுடன் குதித்து காற்றைத் தழுவ முயன்று ''காற்றே!, உன் குரல் இனிமையாக இருக்கிறது. உன்னால் பேச முடியுமா?''

''முடியும்!''

''அப்படியென்றால், ஏன் உன்னை உணர்ச்சியற்ற, உயிரற்ற ஜடப் பொருள் என மக்கள் நினைக்கிறார்கள்?''

''ஏனெனில் எல்லாரும் தங்களைப் பற்றிய விஷயங்களிலேயே தங்களது புத்தியை செலுத்துகிறார்கள். இதனால், நான் பேசுவதை யாரும் கேட்பதில்லை.''



''அப்படியா? என்னால் எப்படி உன் குரலை கேட்க முடிகிறது?''

''ஏனெனில் நீ இனிமையான, அன்பான நல்ல குழந்தை. சரி, நான் வருகிறேன்,'' என்று கூறி காற்று போய்விட்டது.

''மறுபடியும் என்னுடன் பேச வா!'' என்று ஜினால் காற்றுக்கு விடை கொடுத்தாள்.

''என்னுடன் பேச வேறு யாராவது



தயாரா?'' என்று ஜினால் கேட்க, ''நான் இருக்கிறேன்,'' என்றது படுக்கையிலிருந்த குட்டி பொம்மை.

''என் செல்ல பொம்மையே! உனக்கும் பேச வருமா? எனக்குத் தெரியாதே! நான் கோபப்படும்போதெல்லாம் உன்னை எங்கெங்கோ தூக்கி எறிகிறேனே? உனக்கு வலிக்கவே இல்லையா?'' என்று ஜினால் கேட்டாள்.

''ஆமாம், எனக்கு வலிக்கிறது.''

''ஐயோ, என்னை மன்னித்துவிடு. இனி நான் அவ்வாறு செய்யமாட்டேன்,'' என்றாள் ஜினால்.

உடனே அந்த பொம்மையின் அடிபட்ட இடமெல்லாம் மருந்து தடவி, அதனுடன் கொஞ்சிப் பேசி விளையாடினாள். அப்போது வெளியே போயிருந்த அவளது பெற்றோர்கள் வீடு திரும்பினர். அவர்களைக் கண்டவுடன் பொம்மை மறுபடியும் உயிரற்றதாகி விட்டது.

''மனிதர்கள் தன்னைச் சுற்றியுள்ள பொருட்களின் மேல் அன்பும் அக்கறையும் காட்டாமல், உயிருள்ளதையும் உயிரற்றதாக ஆக்கிவிடுகிறார்கள்'' என ஜினால் நினைத்தாள்.



# முன்கோபியின் முகமலர்ச்சி

முத்தூரில் முத்தைய்யா பெரும் பணக்காரன் ஆனால் முன்கோபி. யார் எதைச் சொன்னாலும் அதில் ஏதாவது ஒரு குற்றம் கண்டு கோபம் கொள்வான். இப்படிப் பட்டவனை ஊரார் முன்கோபி முத்தைய்யா என்று பெயரிட்டுக் குறிப்பிடலானார்கள்.

முத்தைய்யா ஒருநாள் தன் மனைவியிடம் ''நீ மோகனுக்குத் திருமணம் செய்துவிட வேண்டும். நான் பள்ளத்தூர் பணக்காரரான லட்சுமணனின் மகள் சண்பகத்தைப் பார்த்திருக்கிறேன். அவளை நம் மோகனுக்கு மணம் செய்து வைக்க எண்ணுகிறேன். நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான். அவளும் ''நீங்கள் என்ன சொன்னாலும் நானும் மோகனும் அதன்படி நடக்கத் தயாராக இருக்கிறோம்,'' என்று கூறி விட்டாள்.

இதற்குப் பிறகு முத்தைய்யா தீர்மானித்தபடியே மோகனுக்கும் சண்பகத்திற்கும் திருமணம் நடந்தது சண்பகமும் தன் கணவன் வீட்டிற்கு வந்தாள். அவள் வந்த நாளிலேயே மோகன் அவளிடம் ''என் தந்தை முன் கோபக்காரர். அதனால் எச்சரிக்கையுடன் பொறுமையாக நடந்து கொள்'' என்று சொல்லி வைத்தான்.

சண்பகம் பணக்கார வீட்டுப் பெண். வீட்டு வேலைகளைச் செய்து பழக்கப்பட்டவளும் அல்ல. அவள் மாமனார் எப்படிப்பட்டவரோ என்று பயந்துகொண்டே இருந்தாள்.

முத்தைய்யாவும் புதிதாக வீட்டிற்கு வந்த மருமகள் பயந்துவிடப் போகிறாளே என்று எண்ணி தன் கோபத்தை எல்லாம் முதல் இரண்டு நாட்களுக்கு அடக்கிக் கொண்டு இருந்தான். அதற்குப் பிறகு எல்லோர் மீதும் எரிந்து விழுந்து கோபத்தைக் காட்டலானான்.

ஒருநாள் முத்தைய்யாவின் மனைவி கறந்த பால் சொம்பைத் தன்

- சிவனார் செல்வன் -



மறுநாள் மத்தியானம் முத்தைய்யா வீட்டு வாசலில் யாரிடமோ பேசிவிட்டு வீட்டிற்குள் சென்றான். அப்போது சண்பகம் ஓர் அழகிய பீங்கான் பாத்திரத்தைத் துணியால் துடைத்துக் கொண்டிருந்தாள்.

அதைக் கண்ட முத்தைய்யா ''இந்த வீட்டில் வேலைக்காரர்கள் எல்லாம் எங்கே தொலைந்து போனார்கள்? மூக்குப் பிடிக்க சாப் பிட்டுவிட்டு வேலை செய்யாமல் எங்கோ அலைகிறார்கள் தடியன் கள்,'' என்று இரைந்தான்.

அதைக் கேட்ட சண்பகம் பயந்து நடுங்கி அந்தப் பீங்கான் பாத்திரத் தைக் கீழே போட்டுவிட்டாள். அது உடைந்து சுக்கல்சுக்கலாகிவிட்டது. அழகிய வேலைப்பாடு கொண் டிருந்த அந்தப் பீங்கான் பாத்திரம் தான் கோபத்தில் இரைந்ததால் தான் உடைந்தது என முத்தைய்யா எண் ணித் தன்னைத் தானே நொந்து கொண்டான்.

இன்னொரு நாளில் சண்பகம் தன் கணவனுக்கும் மாமனாருக்கும் உணவு பரிமாறிக் கொண்டிருந்தாள். அவள் சாம்பார் விட்டபோது அதை ருசிபார்த்த முத்தைய்யன் ''என்ன இது? உப்பே இல்லையே. உன் வீட்டில் உனக்குசமையல் செய்யக் கற்றுக் கொடுக்காமலேயே வளர்த்து விட்டார்களா?'' என்று கத்தினான்.

சண்பகம் பயந்து போய் சாம்பார் பாத்திரத்தை கீழே போட அவ்வளவு சாம்பாரும் கொட்டிப் போயிற்று. தான் கத்தியதால்தான் அப்படி

மருமகளிடம் கொடுத்து அதைச் சமையலறையில் கொண்டுபோய் வைக்கச் சொன்னாள்.

சண்பகமும் பால் சொம்பை எடுத்துக் கொண்டு வந்தபோது அதை கவனித்த முத்தைய்யா ''ஏன் உன் மாமியார் என்ன நொண்டியா, முடமா? பால் சொம் பைத் தானே எடுத்து வந்தால் தேய்ந்து போய் விடுவாளா?'' என்று கோபமாகக் கத்தினான்.

அந்தக் கத்தலைக் கேட்ட சண் பகம் பயந்து நடுங்கித் தன் கையில் இருந்த சொம்பைக் கீழே போட்டு விட்டாள். பால் முழுவதும் கொட்டி வீணாகிவிட்டது.

அதனால் நடுங்கி அவள் கண்ணீர் வடித்தவாறே உள்ளே ஓடிவிட்டாள். அதைக் கண்ட முத்தையா திகைத்துப் போனான்.

நடந்தது என எண்ணி முத்தைய்யா மனம் வருந்தினான்.

அன்று முதல் முத்தைய்யா சற்று உரக்கப் பேசினாலே சண்பகம் பயந்து போய் கீழே விழலானாள். இதைக் கண்டு முத்தைய்யன் வைத்தியரை அழைத்து வந்தான்.

வைத்தியரும் அவளது நாடியைப் பிடித்துப் பார்த்து விட்டு ''இவள் உடம்பிற்கு ஒன்றும் இல்லை. பயந்த சுபாவம் கொண்டவள். அதனால் நீங்கள் கத்தாமல் மெதுவாகப் பேசினால் சரியாகிவிடுவாள்,'' என்று முத்தைய்யாவிடம் கூறிவிட்டுச் சென்றார்.

அதைக்கேட்ட முத்தைய்யன் மனதில் ஒரு கொந்தளிப்பே ஏற்பட்டது. தான் விரும்பிக் கொண்டு வந்த மருமகளின் நிலை தன்னால் மோசமாவது கண்டு அவன் மிகவும் மனம் வருந்தினான்.

கொஞ்ச நாட்களுக்குப் பின் பொங்கல் பண்டிகை வந்தது. முத்தைய்யாவின் மகள்களும் மாப்பிள்ளைகளும் அவர்களது குழந்தைகளும் முத்தைய்யாவின் வீட்டிற்கு வந்தார்கள். அன்று மதிய சாப்பாடானதும் முத்தைய்யா தன் வயல்களைப் பார்க்கப் போய் விட்டான். அதன் பிறகு அங்கிருந்தவர்கள் சிரித்துப் பேசி கேலியும் கும்மாளமுமாய் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தார்கள்.

முத்தைய்யா வயல்களைப் பார்த்துவிட்டு வீட்டிற்குத் திரும்பி வந்தான். அது வரை கலகலப்பாய் பேசிக் கொண்டிருந்த எல்லோரும் அவனைக் கண்டதும் அமைதியாகி விட்டார்கள். பிறகு எல்லோரும் எழுந்து போக முயன்றார்கள். அதுகண்ட முத்தைய்யா சிரித்தவாறே அவர்களைப் பார்த்து ''ஏன் பேசாமல் எழுந்து போகிறீர்கள்? என்னைப் பார்த்தா பயப்படுகிறீர்கள். இனி மேல் பயப்படவே வேண்டாம். இன்றுமுதல் நானும் உங்களோடு சேர்ந்து சிரித்துப் பேசிக் கொண்டிருக்கப் போகிறேன். உட்காருங்கள்!'' என்று சொல்லிக் கொண்டே அங்கே உட்கார்ந்தான்.

அதைக் கேட்டு எல்லோரும் 'அஹ்ஹஹா' என்று பலமாகச் சிரித்து கைதட்டி ஆர்ப்பரித்தார்கள்.



# கஷ்மீர் மாநிலத்து நாட்டுப்புறக் கதை

*ஜம்மு கஷ்மீர் மாநிலம் இந்தியாவின் வடகோடியில் உள்ளது. கஷ்மீர் பள்ளத்தாக்கு 18000 அடி உயரத்தில் அமைந்துள்ளது. ஜேலம் நதி இதன் நடுவே பாய்ந்து இதன் வழிகளையும் நிலத்தையும் வளமாக்குகிறது. இங்கு தென்படும் செடிகொடி மரங்களை இப்பள்ளத்தாக்கை உலகின் சொர்க்கமாக ஆக்கியுள்ளன.*

*கஷ்மீரில் கம்பீரமாகக் தென்படும் மரங்கள் சினார் எனப்படுவது. இவை இப்பள்ளதாக்கு முழுவதிலும் நிறைந்துள்ளன. இவை மிகவும் உயர்ந்தும் பருமனாயும் இருப்பதோடு அந்தந்தப் பருவகாலங்களுக்கு ஏற்ப தம் இலைகளின் நிறத்தை மாற்றிக் கொள்கின்றன.*

*இதன் காடுகளில் பனிசிறுத்தை, கஸ்தூரி மான், ஓநாய், செங்கரடி, கருங்கரடி, காட்டாடு, முரட்டுக் கழுதை முதலிய மிருகங்களைக் காணலாம்.*

*இங்க பாயும் முக்கியநதிகள் சிந்து, சேனாப், ஜேலம், ரவி என்பன. இவைபோக ஏராளமான சிற்றோடைகளையும் ஏரிகளையும் காணலாம்.*

*ஜம்மு ஆலயங்களுக்குப் பெயர் பெற்றது. பஹு மாதா, ரகுநாத் ஆலயம் ஆகியவை குறிப்பிடத் தக்கவை.*

## அபூர்வ அன்பளிப்பு

இமயமலையில் மத்தியில் ஒரு சிறு கிராமம் இருந்தது. அதன் மூன்று திக்குகளில் உயர்ந்த மலைகளும் நாலாவது திக்கில் ஒரு ஏரியும் இருந்தன. அதனால் தரைவழியாக அந்த கிராமத்திற்குச் செல்லவழி இல்லை.

ஏரியில் படகின் உதவியால் சென்றுதான் நாட்டின் மற்ற பகுதிகளுக்குப் போக வேண்டும். மேலும் அந்த ஏரி வருடத்தில் எட்டு மாதங்கள் பனியாக உறைந்து போய்விடும்.



இதைப் பற்றி அக்கிராமவாசிகள் கவலைப்படுவதும் இல்லை. ஏனெனில் அவர்களுக்குத் தேவை யானவை யாவும் அவ்வூரிலேயே விளைந்தும் கிடைத்தும் வந்தன. எது வேண்டுமானாலும் ஒருவர் பண்ட மாற்று முறையில் தாம் விரும்பி யதைப் பெற்றுவிடலாம்.

இந்த நிலையிலிருந்த அந்த கிரா மம் வெளி உலகத்துடன் தொடர்புக் கொள்ளாமலேயே இருந்து வந்தது. மேலும் அவர்கள் பண்டமாற்று முறையில் தமக்குத் தேவையான வற்றை அடைந்து வந்ததால் அவர் கள் பணத்தைப் பயன்படுத்த வில்லை. அவர்களிடம் பணமும் இருக்கவில்லை.

பத்தொன்பதாவது நூற்றாண்டில் கூட அவ்வூரார் எந்த ஒரு நாண யத்தையும் பார்த்ததே இல்லை. அப்படி ஒன்று இருப்பதுகூட அவர் களுக்குத் தெரியாது.

ஒருநாள் அந்த ஊர் மக்களுக்கு ஒரு வெள்ளி நாணயம் கிடைத்தது. அதனை ஏதோ ஒரு பறவை தான் வேறு ஒரு ஊரிலிருந்து கொத்திக் கொண்டு வந்து போட்டிருக்க வேண் டும் என்று அவர்கள் நினைத்தனர்.

அந்த நாணயத்தில் ஒரு புறத்தில் மன்னரின் உருவம் பொறிக்கப்பட்டு இருந்தது. அந்த நாணயத்தை எடுத்த கிராமவாசிக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. உடனே அங்கே வந்த ஒரு விவசாயியிடம் அதைக் காட்டி அதை என்ன செய்ய வேண்டும் என்று அவன் கேட்டான்.



அந்த விவசாயியும் ''எனக்குத் தெரியவில்லை. நீ நம் கிராம அதி காரியிடம் இதைக் காட்டி யோசனை கேள்'' என்றான். கிராமவாசியும் கிராம அதிகாரியைக் கண்டு அந்த நாணயத்தைக் காட்டவே, அவர் அதைப் பார்த்து திகைத்துப் போனார்.

கிராமத்து மற்ற மக்களுக்கும் அந்த அதிசயப் பொருள் பற்றித் தெரியவே, எல்லோரும் கிராம அதி காரியின் வீட்டில் கூடிவிட்டார்கள். யாருக்கும் அதை என்ன செய்வது என்று தெரியவில்லை.

அப்போது கிராம அதிகாரி தான் அன்றிரவு முழுவதும் யோசித்து விட்டு மறுநாள் அதற்கான வழியைக் கூறுவதாகச் சொல்லி அவர்களை அனுப்பி விட்டார்.

அவர் அன்றிரவு முழுவதும்



# உயரிய குங்குமப்பூ



குங்குமப்பூ வாசனைத் திரவியங்களில் மிக மதிப்புள்ளதும் உயர்ந்ததும். இது அதிகமாக ஸ்ரீநகர் அருகே உள்ள பாம்போர் என்ற ஊரைச் சுற்றி வளர்க்கப் படுகிறது. பல நூற்றாண்டுகளாக இது இங்கு விளைவிக்கப்படுகிறது. இங்கு இது வளர தக்க தட்ப வெப்ப நிலை உள்ளது.

ஊதா நிற மலர்கள் இதில் தோன்றி மஞ்சள் காம்பில் மூன்று சிவப்பு இதழ்கள் வெளி வருகின்றன. இந்த இதழ்களைப் பறித்து உலர வைத்து குங்குமப் பூ என்ற வாசனைத் திரவியமாக எங்கும் அனுப்பப்படுகிறது. ஒரு கிலோ குங்குமப் பூவில் இந்த இதழ்கள் 150000 இருக்கும்.

யோசித்துக் கடைசியில் ஒரு முடிவிற்கு வந்தார்.

மறுநாள் கிராம வாசிகள் அவரைக் காண வந்தார்கள். அப்போது அவர் அந்த நாணயத்திலிருந்த மன்னரின் உருவத்திற்கு வணக்கம் செலுத்தி விட்டு இது அபூர்வமான பொருள். இதனை நம் மன்னருக்கு நம் அன்பளிப்பாக சமர்ப்பித்துவிட லாம்,'' என்றார்.

மற்ற கிராமவாசிகள் அதுவே சரி என்றனர். அடுத்து அந்த அபூர்வ அன்பளிப்பை மன்னரிடம் எப்படி கொண்டு போய்க் கொடுப்பது என்பது பற்றி விவாதித்தார்கள்.

கிராம அதிகாரி அந்த அன் பளிப்பை ஒரு அழகிய பல்லக்கில் வைத்து எடுத்துச் செல்லவேண்டும் என்றும் அந்த பல்லக்கை ஊர் பிரமுகர்கள் ஆறுபேர் சுமக்க வேண் டும் என்றும் கூறினார். அதை யாவரும் ஏற்றார்கள். உயர்தர மரத்தைக் கொண்டு ஓர் அழகிய பல்லக்கு தயாரிக்கப்பட்டது. அத னுள் விரிக்க பட்டுக் கம்பளம் தயாரிக்கப்பட்டது. பல்லக்கைத் தூக்கிச் செல்ல ஆறு பிரமுகர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

பல்லக்கினுள் பட்டுக் கம்பள விரிப்பின் மேல் பூவேலை செய் யப்பட்ட பட்டுக் கைக்குட்டை விரிக்கப்பட்டது அதன் மீது வெள்ளி நாணயம் யாவரும் மரியாதையுடன் கை கட்டி நிற்கையில் வைக்கப் பட்டது. அப்பல்லக்கை அந்த கிராமத்திலிருந்து வெளியே எடுத்துச் செல்ல ஒரு படகு அலங்கரிக்கப் பட்டது. வாத்தியங்கள் முழங்க இசை வாணர்கள் பாட, இளம்பெண்கள் நடனமாட அந்தப் பல்லக்கு படகில் வைக்கப்பட்டது.

கிராம அதிகாரி அப்படகில் ஏறி

கிராம வாசிகளிடம் விடைபெற்றுக் கொள்ள படகும் நகர்ந்து சென்றது.

அந்தப் பல்லக்கு புனிதமாகக் கருதப்பட்டு படகில் உள்ளவர்களால் மரியாதை செலுத்தப்பட்டது. அதற்கு முன் விளக்கை ஏற்றி வைத்து பயபக்தியுடன் வணங்கினார்கள். அப்படகு ஏரியின் மறு கரையை அடைந்தது. பல்லக்கை ஆறு பிரமுகர்கள் தூக்கிக் கரையில் இறக்க கிராமதிகாரியும் இறங்கி அதன் பக்கம் நின்றார். அப்போது கரையில் நின்றவர்கள் அப்பல்லக்கில் என்ன இருக்கிறது என்று கிராம அதிகாரியிடம் கேட்க அவரும் அதில் அரசருக்கு அளிக்கப்பட இருக்கும் அபூர்வ அன்பளிப்பு இருப்பதாகப் பெருமையுடன் கூறினார்.

மூன்று நாட்களுக்குப் பிறகு கிராம அதிகாரி பல்லக்குடன் தலைநகரை அடைந்தார். ஆறு பிரமுகர்கள் பல்லக்கைச் சுமந்து கொண்டு பல தெருக்கள் வழியே சென்றார்கள். கிராம அதிகாரி கைகட்டிப் பணிவுடன் மரியாதை செலுத்தியவாறே அதன் பின்னால் நடந்து சென்று கொண்டிருந்தார்.

தலை நகர வாசிகள் கூட அந்தப் பல்லக்கு மிக்க மரியாதையுடன் சுமந்து செல்லப்படுவதைக் கண்டு பாதை ஓரமாக ஒதுங்கி நின்று அதை வணங்கி மரியாதை செலுத்தினார்கள். அந்தப் பல்லக்கில் என்ன இருக்கிறது என்று கேட்டவர்களிடம் கிராம அதிகாரி அதில் அரசருக்கு அளிக்கப் போகும் அபூர்வ அன்பளிப்பு இருப்பதாகக் கூறிக் கொண்டு வந்தார்.

பல்லக்கில் அபூர்வ அன்பளிப்பு அரண்மனைக்கு எடுத்துச் செல்லப்படுகிறது என்ற செய்தி விரைவில் தலைநகர் முழுவதிலும் பரவி விட்டது. எனவே அந்தப் பல்லக்கைக் காண மக்கள் ஆவலுடன் அங்கங்கே நின்றார்கள். பல்லக்கு அரண்மனை வாயிலை அடைந்தது. அப்போது அதன் வாசலில் நின்றிருந்த காவல் அதிகாரி அதனுள் என்ன இருக்கிறது என்று பார்த்த பின் அதனை உள்ளே அனுமதிப்பதாகக் கூறினார்.

கிராம அதிகாரியோ, "அதில் எங்கள் கிராமத்தவர் மன்னருக்கு அளிக்கப் போகும் அபூர்வ அன்பளிப்பு உள்ளது. அதனை அவர்தாம் முதலில் பார்க்க வேண்டும். வேறு யாரும் பார்க்கக் கூடாது," என்று பணிவாகக் கூறினார்.

அந்த அதிகாரி பல்லக்கை உள்ளே





கொண்டு செல்ல அனுமதித்தார். மன்னனுக்கும் ஒரு அன்பளிப்பு வரும் தகவல் தெரிவிக்கப்பட்டது. மன்னனும் பல்லக்கில் வைத்துக் கொண்டுவரப்படும் அன்பளிப்பு என்ன என்று பார்க்க ஆவலாக இருந்தான்.

பல்லக்கு மரியாதையுடன் தர்பார் மண்டபத்துள் எடுத்துச் செல்லப் பட்டது. கிராம அதிகாரி அங்கிருந்த மன்னனையும் அமைச்சர்களையும் வணங்கினார். பிறகு மன்னனிடம் ''அரசே எங்கள் ஊரில் கிடைத்த அதிசயப் பொருளை இந்தப் பல் லக்கில் வைத்து எடுத்து வந்திருக் கிறோம். அந்த அதிசய அபூர்வப் பொருளைத் தங்களுக்கு அன்பளிப் பாகக் கொடுக்க விரும்புகிறோம். தாங்கள் அதனை ஏற்றுக் கொள்ள வேண்டும்,'' என்று கூறிப் பணி வுடன் வணங்கினார்.

மன்னனும் ''பேஷ், தொலை விலுள்ள உங்கள் ஊரில் இருந்து ஓர் அபூர்வப் பொருளை எனக்கு அன் பளிப்பாகக் கொடுக்க இப்படி கோலாகலமாக எடுத்து வந்திருப்பது கண்டு மகிழ்கிறேன். அதனை ஏற் கிறேன்,'' என்றான்.

கிராம அதிகாரியும் பல்லக்கின் திரையை விலக்கி உள்ளே கையை விட்டார். ஆனால் அங்கே தான் வைத்த வெள்ளி நாணயம் கைக்குத் தட்டுப்படாமல் இருப்பது கண்டு திகைத்துப் போனார். பிறகு அவர் பல்லக்கினுள் தலையை விட்டு நன்கு பார்த்தார். நாணயம் தென்படவே இல்லை.

கிராம அதிகாரியும் ஆறு பிரமுகர் களும் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தார்கள். பல்லக் கைச் சுமந்து வந்த போது அதன் அசைவில் அந்த வெள்ளி நாணயம் உருண்டு வழியில் எங்கோ விழுந்து விட்டது. அது அவர்களுக்குத் தெரிய வில்லை. அவர்கள் கைகளைப் பிசைந்து கொண்டு நின்றார்கள். அப்போது முதலமைச்சர் ''இதென்ன வேடிக்கை? மன்னரை அவமானப் படுத்துகிறீர்களா? இதற்காக உங் களை தண்டிக்க வேண்டும்,'' என்று கோபத்தோடு கூறினார்.

கிராம அதிகாரியோ, ''அரசே! தங்களுக்கு எங்கள் விசுவாசத்தைக் காட்டவே 'அந்த அபூர்வப் பொரு ளைத் தங்களுக்கு அளிக்க இதில்

வைத்து பயபக்தியுடன் எடுத்து வந்ததோம். ஆனால் அது மாயமாய் மறைந்துவிட்டதே!'' என்று கண்ணீர் வடித்து கதறினார்.

மன்னனும் அவரது உணர்ச்சியைப் புரிந்துகொண்டு அவர்கள் ஒன்றும் அறியாத அப்பாவிகள் தானா என்பதைப் பரீட்சிக்க விரும்பினான். அதனால் அவர்களை ஓர் அறையில் இருக்கச் சொல்லி அங்கு அவர்களே தமக்கான உணவைத் தயாரித்துக் கொள்வதற்கான பொருள்களையும் வைக்க ஏற்பாடு செய்தான்.

அவர்களுக்கு அடுப்பு மூட்ட தணலுக்குப் பதிலாக நெருப்பு குச்சிகளைக் கொடுக்கச் சொன்னான். அவர்களுக்கோ நெருப்புக் குச்சியை எப்படிப் பயன்படுத்துவது என்பது தெரியாததால் காய்கறிகளையும் கோதுமையையும் பச்சையாகவே சாப்பிட்டார்கள்!

இதைக் கண்டபின் மன்னன் அவர்களை அழைத்து விவரங்களைக் கூறும்படிக் கேட்டான். அவர்கள் ''அரசே! எங்கள் ஊரில் சில நாட்களுக்குமுன் வட்ட வடிவில் பளபளக்கும் சிறு அபூர்வ பொருள் ஒன்றைக் கண்டெடுத்தோம். அதில் ஒரு புறத்தில் தங்களது உருவம் பொறித்திருந்தது. அதற்குமுன் அது போன்ற பொருளை நாங்கள் பார்த்ததே இல்லை. எனவே அதை எங்களது அன்பளிப்பாகத் தங்களுக்கு அளிக்கத் தீர்மானித்தோம். அதற்காக உயர்தர மரத்தில் அழகிய பல்லக்கைச் செய்தோம். அப்பல்லக்கில் கம்பளம் விரித்து, ஒரு பட்டுத் துணி மீது அந்த அபூர்வப் பொருளை வைத்து, எங்கள் ஊரின் ஆறு பிரமுகர்கள் பயபக்தியுடன் அதனைச் சுமந்து வந்தார்கள். அதை இப்போது காணவில்லை!'' என்றார்கள்.

அவர்கள் சொன்னதை எல்லாம் கவனமாகக் கேட்டான். உடனே அவன் ஒரு வெள்ளி நாணயத்தை எடுத்து அந்தக் கிராம அதிகாரியிடம் கொடுத்து, ''இதை அபூர்வ அன்பளிப்பாக எனக்குக் கொடுங்கள்,'' என்றான். கிராம அதிகாரியும் அதை ஆச்சரியத்துடன் பார்த்துவிட்டு மறு பேச்சு பேசாமல் மன்னனிடம் கொடுத்தார்.

மன்னனும் அந்த கிராமவாசிகளுக்கு நிறைய பரிசுகளை அளித்து அவர்களை அவர்களது கிராமத்திற்கு அனுப்பி வைத்தான்.



# நம் இந்தியா

1. மேற்கு வங்கத்து சித்திரஞ்சன் தொழிற்சாலையில் ரயில் என்ஜின்கள் உருவாக்கப்படுகிறது. இங்கிருந்து முதலாவது ரயில் என்ஜின் எப்போது வெளி வந்தது?
   அ. 1950-51 ஆ. 1955-56
   இ. 1959-60 ஈ. 1951-62
2. அசோகரின் கல்வெட்டு வாசகங்கள் எழுதப்பட்ட மொழி எது ?
   அ. மகதி ஆ. பிராஹ்மி
   இ. சௌரசேனி ஈ. பாலி
3. அனைத்திந்திய ஹரிஜன் சங்கத்தை நிறுவியவர் யார்?
   அ. பி.ஆர். அம்பேத்கர்
   ஆ. காந்திஜீ
   இ. ஜக்ஜீவன்ராம்
   ஈ. டி.கே.கார்வே
4. எந்த சாது செருப்புத் தைக்கும் தொழிலாளி?
   அ. கபீர் ஆ. சாதனா
   இ. ரவிதாஸ் ஈ. நாம்தேவ்
5. யூனியன் பிரதேசங்களில் எது மிகப் பெரியது?
   அ. டில்லி
   ஆ. பாண்டிச்சேரி
   இ. அந்தமான் நிகோபார் தீவுகள்
   ஈ. சண்டிகட்



6. மேற்கண்ட படத்தில் உள்ள தேசியத் தலைவர் யார்?
7. மதநம்பிக்கை கொண்ட ஒரு முஸ்லீம் தினமும் எத்தனை முறை தொழுகைகளைச் செய்கிறார்?
   அ. இரண்டு முறை
   ஆ. மூன்று முறை
   இ. நான்கு முறை
   ஈ. ஐந்து முறை
8. தொழிற்சாலைகள் எந்த மாநிலத்தில் மிக அதிகம்?
   அ. தமிழ்நாடு
   ஆ. மகாராஷ்டிரம்
   இ. குஜராத்
   ஈ. ஆந்திர பிரதேஷ்

*(விடைகள் அடுத்த மாதம்)*

## அக்டோபர் மாத வினாக்களின் விடைகள்

1. *சத்தீஸ்கட், ராய்பூர்*
2. *ராஜஸ்தான்*
3. *லார்ட் ஹார்டிஞ்ச்*
4. *சுந்தர்லால் பஹுகுணா*
5. *கர்னூல்*
6. *1919*



# விநாயகர்

**சா**ளை இப்படி அமர்க்களப்பட்டுக் கொண்டிருக்கையில் முனியன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். அவனருகே மலர்களால் நிறைந்த விநாயக விக்கிரகம் இருந்தது. எங்கும் கரும்புச் சாறு சிந்தி நிலம் சதுப்பாக ஆகிவிட்டது.

காவலாளிகளைக் கேட்டபோது "நேற்று நள்ளிரவின்போது ஒரு யானை பிளிறிடும் குரல் கேட்டு அரைத் தூக்கத்தில் இருந்த நாங்கள் கண் விழித்துப் பார்த்தோம். முனியன் தூங்கிக் கொண்டிருந்தான். ஒரு வெள்ளை யானை கரும்பை எல்லாம் எடுத்து ஒடித்து மென்று தின்று சக்கையை உமிழ்ந்துகொண்டே இருந்தது. அதுகண்டு பயந்து ஓடி விட்டோம்," என்று கூறினார்கள்.

பண்ணையாருக்கு மனம் ஒரே யடியாக அப்போது மாறிவிட்டது. முனியனிடம் உள்ள தெய்வீகச் சக்தியை உணர்ந்தார்.

தாம் அவனைத் துன்புறுத்தியது எவ்வளவு தவறு என்பதும் அவருக்குத் தெரிந்தது. கண்ணீர் மல்க தாம் செய்த தவறுக்கு மன்னிப்பு கேட்பதுபோல அப்படியே அடியற்ற மரம் போல முனியனின் கால்களில் விழுந்து அவர் வணங்கினார்.

அப்போதுதான் முனியன் கண் விழித்துப் பார்த்தான். தன் எஜமானன் தன் காலில் விழுந்து வணங்குவது கண்டு திடுக்கிட்டான்.

பண்ணையார் அருகே இருந்த விநாயக விக்கிரகத்தையும் வணங்கி "சுவாமி! இப்போது எங்களுக்கு அருள் புரிந்தீர்கள். நாங்கள் புனிதர்களானோம்," என்று சொல்லி



நடந்ததை எல்லாம் முனியனிடம் கூறினார். இதற்குள் மக்கள் கூட்டம் அங்கு சேர்ந்து விட்டது.

முனியனும் தன் மனைவி மக்களுடன் தன்னருகே இருந்த விநாயக விக்கிரகத்தை வணங்கி ''சிறுவயது முதல் உங்களை நான் மனதிலேயே வழிபட்டு வருகிறேன். ஆடம்பரமாக மலர் கொண்டு அலங்கரித்துப் பூசிக்கவில்லை. ஆனால் எனக்காக இவ்வளவு கரும்பையும் தின்று சிரமப்பட்டீர்களா? வெள்ளை யானை உருவில் தாங்கள் எல்லோருக்கும் தரிசனம் தந்தீர்கள். ஆனால் நான் மட்டும் உங்களைக் காணாத மடையனாகிவிட்டேன். எனக்குக் காட்சி தர மாட்டீர்களா?'' எனக் கதறி வேண்டினான்.

அப்போது விநாயகர் தம் துதிக்கையில் ஒரு கரும்புத் துண்டைப் பற்றியவாறே முனியனின் முன் தோன்றினார். முனியனின் மகன் வைத்திருந்த கரும்புத் துண்டுதான் அது. விநாயகர் தம் துதிக்கையால் முனியனைத் தன்னருகே இழுத்து நிறுத்தி அவன் தலை மீது துதிக்கையை வைத்து ஆசீர்வதித்தார்.

அவர் முனியனிடம் ''முனியா! ஜாதி, இனம் என்றெல்லாம் நான் வகுத்து வைக்கவில்லை. இவற்றை மனிதர்களே உண்டாக்கினார்கள். உயர்வு, தாழ்வு என்றெல்லாம் என் சன்னதியில் கிடையாது. எனக்கு எல்லோரும் சமமே. அதனால் தான் இப்போது உனக்குக் காட்சி அளிக்கிறேன்,'' என்று கூறினார்.

முனியனோடு அங்கு கூடியிருந்த எல்லோருமே விநாயகரை தரிசித்தார்கள். அங்கே கரும்பு ஏந்திய விநாயகரைக் கொண்ட ஆலயம் நிர்மாணிக்கப்பட்டது.

பாவனமிசிரர் இவ்வாறு பல சிற்பங்களைப் பற்றிய கதைகளைக் கூறினார். தலைவாசலில் செதுக்கப்பட்ட சிலையை தினமும் வெகு நேரம் வரை நின்று பார்த்து வந்த ஒரு வாலிபன் பாவனமிசிரரின் கால்களில் விழுந்து வணங்கி ''ஐயனே! இக்கோவிலின் தலைவாசலில் உள்ள சிற்பத்தை யார் செதுக்கினார்? அவரைப் பற்றிக் கூறுங்கள்!'' என வேண்டினான்.

பாவனமிசிரரும் பரிவுடன் அரசனைப் பார்த்து ''அப்பனே! உன்னைப் பார்த்தால் ஒரு சிற்பி போல தெரிகிறது. தலைவாசலில் உள்ள சிலை

எனக்கும் மிகவும் பிடித்தமானதே. அந்த சிலையை செதுக்கிய சிற்பியைப் பற்றி கூறுகிறேன், கேள்!'' எனக் கூறி கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.

''வாதாபி நகரத்திற்கு சாது சன்னியாசிகளின் கூட்டம் வந்து போய்க் கொண்டே இருக்கும். அப்படிப் பட்ட ஒரு கூட்டத்தோடு வந்த பதினான்கு வயது வாலிபன் ஒருவன் இந்த வாதாபி கணபதியின் ஆலயத்திலேயே தங்கிவிட்டான். அவன் பெயர் என்னவோ, ஊர் எதுவோ அவனுக்கே தெரியாது. அவனது நெற்றியில் பெரிய காயம் இருந்ததால் பலத்த அடிபட்டு மூளையே கலங்கிவிட்டதெனப் பலர் நினைத்துக் கொண்டார்கள். அவன் ஊமை போலப் பேசாமல் இருந்தான். அவன் கடவுளின் திருஉருவங்களை வரைந்துகொண்டே இருப்பான். அப்போதெல்லாம் அவன் முகம் மலர்ச்சியுடன் காணப்படும். அவன் வரையும் உருவங்கள் எல்லாம் விநாயகருடையதே. அவனது இந்த விசித்திரப் போக்கால் யாவரும் அவனை விசித்திரன் என அழைத்து வந்தனர்.

அப்போது கஜானன பண்டிதர் படுகிழவராகிவிட்டார். தினமும் மாலையில் தன் வீட்டில் சிறுவர் சிறுமியரைக் கூட்டி விநாயகரைப் பற்றிய கதைகள் கூறி வந்தார்.

விசித்திரனும் அவரது வீட்டு வாசலில் உட்கார்ந்துகொண்டு அவர் கூறும் கதைகளை கவனமாகக்



கேட்கலானான். முதல் நாள் கேட்ட கதையின் ஆதாரத்தில் மறுநாள் அவன் ஏதாவது ஒரு சுவரில் சித்திரம் வரைந்து வந்தான்.

கஜானன பண்டிதருக்கு விசித்திரன் மீது அலாதியான பிரியம். வீட்டிற்குள் வந்து கதையைக் கேட்குமாறு அவர் கூறினாலும் அவன் வாசலில் அமர்ந்தேதான் கேட்டு வந்தான். அவன் வரையும் விநாயகரின் உருவங்களைக் கண்டு வியந்து மகிழ்ந்து பல புதிய கதைகளை அவனுக்குச் சொல்லி வந்தார்.

பகலெல்லாம் விசித்திரன் இவ்வாறு படங்களை வரைந்து இரவில் ஊரின் ஒதுக்குப்புறமாக உள்ள இடத்தில் தூங்குவான்.

அவனது நண்பர்கள் குயவர்களும் தோல் தைப்பவர்களும் மற்றும் தாழ்த்தப்பட்டவர்களும் ஆவர். இரவில் எவ்வளவு நேரம் கழித்து



அவன் வந்தாலும் அவனுக்காகத் தாம் சாப்பிடும் உணவில் கொஞ்சம் வைத்தே இருப்பார்கள். இப்படியாக விசித்திரன் வளர்ந்து வரலானான்.

தான் இன்னாரென என விசித்திரன் அறியாதபோதிலும் அவனுக்குத் தாய் தந்தையரும், அண்ணன் மார்களும் இருந்தனர்.

வாதாபி நகரிலிருந்து கொஞ்ச தூரத்திலுள்ள ஒரு ஊரில் ஒரு நடுத்தர குடும்பத்தில் விசித்திரன் பிறந்தான். தன் தந்தையைப் போல அவன் சித்திரங்கள் வரையலானான். அவன் புத்தி வேறு எதிலும் செல்லவில்லை.

அவனது அண்ணன்களும், அண்ணிகளும் அவனை உதவாக்கரை என்று கூறி வீட்டைவிட்டே துரத்திவிட்டார்கள். அவனுக்கு விநாயகர் என்றால் மிகவும் பிடிக்கும். அவன் வாதாபி நகருக்குக் கிளம்பிச் சென்றான். வழியில் பசியாலும் தாகத்தாலும் வாடி ஒரு கருங்கல் பாறை மீது நினைவிழந்து அவன் விழுந்துவிட்டான்.

அடிபட்டு காயமுற்ற அவனை சன்னியாசிகளின் கூட்டம் ஒன்று கண்டது. அவர்கள் அவன் மீது இரக்கம் கொண்டனர். யாரோ அனாதை கவனிப்பாரற்றுக் கிடக்கிறான் என எண்ணி அவனது மயக்கத்தைப் போக்கித் தம்மோடு அழைத்துக் கொண்டு வந்து வாதாபி நகரில் சேர்த்தனர்.

அந்த வருட விநாயக சதுர்த்தியின் போது ஒரு கண்காட்சி நடத்தப் பட்டது. அழகிய விநாயக உருவங்களை அக்கண்காட்சியில் வைக்கலாம் என அறிவிக்கப்பட்டதால் வண்ணவண்ண விநாயகர் பொம்மைகள் பல வந்தன.

அவற்றில் மிக அழகானதைக் கண்காட்சி நடத்துவோர் ஆயிரம் பவுன்கள் கொடுத்து வாங்கிக் கொள்வதாகவும் அறிவித்திருந்தார்கள். அந்தப் பொம்மையைச் செய்தவனுக்கு நவரத்தினங்கள் பதித்த தங்கத்தோடா போடுவதாகவும் அறிவிக்கப்பட்டது.

விசித்திரனும் தன் குயவ நண்பன் ஒருவனிடம் கூறி விநாயகர் பொம்மையைத் தன் கற்பனைப்படி செய்ய வைத்தான் அதற்கு சுண்ணாம்பும், மையும், மஞ்சளும், பச்சிலைச் சாறும் பூசி பலவண்ணங்களில் தோன்றச் செய்தான்.

அவன் அந்த பொம்மையைக்

கண்காட்சியில் வைக்கச் சென்ற போது அதனை நடத்துபவர்கள் அனுமதி கொடுக்கவில்லை. அவன் தனக்குப் பரிசு எதுவும் வேண்டாம் என்றும் தன் பொம்மையை மற்ற வர்கள் பார்த் தால் போதும் எனக் கூறி அவர்களிடம் கெஞ்சினான்.

அப்போது அவர்கள் "ஊர், பேர் தெரியாத நீ தாழ்த்தப்பட்டோரின் மத்தியில் வாழ்ந்து வருகிறாய். இப் படிப்பட்டவனின் பொம்மையை மற்ற உயர்குலத்தவர் செய்த பொம் மைகளோடு சேர்த்து வைப்பதா? முடியாது. அந்தத் தகுதி உன் பொம் மைக்கு இல்லை!" என்று கூறி விட்டார்கள்.

அதுகேட்டு விசித்திரன் மனம் ஒடிந்து போனான். அப்போது அவ னது குயவ நண்பன் அவனிடம், "கவலைப்படாதே. இங்கே இல்லா விட்டால் நமது பொம்மையை வேறு ஏதாவது ஓர் இடத்தில் வைத்து மக்கள் பார்க்கும்படி செய்தால் போயிற்று," எனக் கூறினான்.

பிறகு கண்காட்சி நடக்கும் இடத் திலிருந்து சற்று தூரத்தில் உள்ள ஒரு வாழைமரத்தடியே வைத்து அவர்கள் இருவரும் அதன் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டார்கள்.

கண்காட்சியில் பொம்மைகளைப் பார்த்து வந்தவர்கள் அவற்றிற்கு உபயோகப்பட்ட வண்ணத்தின் தரம்



விலை முதலியவற்றை விசாரிக்கலானார்கள். அவற்றைச் செய்தவர்கள் பெயர் பெற்ற கலைஞர்களா எனக் கேட்டார்கள்.

ஆனால் சிறுவர்களோ விசித்திரன் செய்து வைத்த விநாயக பொம்மையைச் சுற்றிக் கூட்டமாக நின்றனர். அப்போது ஆகாயத்தில் பளிச்சென மின்னியது. அதிலிருந்து இரு அழகிய பெண்கள் இறங்கிக் கண்காட்சி நடக்கும் இடத்திற்கு வந்தார்கள். அவர்கள் அணிந்திருந்த நகைகள் கண்களைப் பறித்தன.

மக்கள் அவர்களைப் பார்த்து ஆச்சரியப்பட்டனர். அப்போது அந்த இருவரில் பெரியவள், ''எங்கள் ஊர் கலாநகரம் என்பது. எங்களுக்குப் பிடித்தமான விநாயகர் பொம்மையை பத்தாயிரம் பவுன்கள் கொடுத்து வாங்கப் போகிறோம். அதற்காகவே ஊர் ஊராகச் சுற்றிப் பார்த்து வருகிறோம்,'' எனக் கூறி கால் சலங்கைகள் 'கலகல'வென ஒலிக்க நடந்தாள்.

உடனே கண்காட்சியிலிருந்த கலைஞர்கள் அந்த பெண்கள் தம் பொம்மைகளைக் காண வருவார்களென எதிர்பார்த்து தம் பொம்மைகளின் பக்கம் போய் நின்றார்கள்.

அப்போது இளையவள் ''என் தமக்கை பிரசன்னவதனி நன்கு பாடக் கூடியவள். ரசித்து சாப்பிடுவாள். நன்கு சாப்பிட்ட பிறகே பாடுவாள்,'' எனக் கூறிப் புன்னகை புரிந்தாள்.

மூத்தவளும் ''என் தங்கை மோகனா நன்கு நாட்டியம் ஆடுவாள். அவளைப் போல வேறு யாராலும் நாட்டியம் ஆட முடியாது,'' என்றாள்.

அப்போது மோகனா, ''எங்களைப் பாட வைக்கவும் ஆட வைக்கவும் இந்திரனாலும் குபேரனாலும் கூட முடியாது. ஆனால் எங்களுக்குப் பிடித்தமான விநாயக உருவம் மட்டும் கிடைத்துவிட்டால் அதன் முன்பாக நாங்கள் ஆடிப் பாடுவோம்,'' என்றாள். அதைக் கேட்ட மக்கள் யாவரும் அதிசயத்தோடு அந்த இரு பெண்களையும் பார்த்தார்கள். பிறகு அவர்கள் விநாயகர் பொம்மைகளைக் காண வழிவிட்டு நின்றார்கள். (தொடரும்)





# நண்பர்கள் பலவிதம்

மகுடபதிக்கு அரச சபையில் உயர் உத்தியோகம் கிடைத்துவிட்டது. அதனால் அவன் தலைகால் தெரியாமல் துள்ளிக் கொண்டிருந்தான். யாரையும் மதிப்பதும் இல்லை.

ஒருநாள் எங்கோ போய்க் கொண்டிருக்கையில் வெயில் வெயில் களீரென்று அடிக்கவே, அதைத் தாங்க முடியாமல் அவன் ஒரு மரத்தடியே போய் நின்றான். அப்போது அங்கே அவனுடன் குருகுலத்தில் படித்த பாலன் இருந்தான். அவன் ஏழை. அதிர்ஷ்டம் அவனுக்குக் கை கொடுக்காததால் அவன் இன்னமும் ஏழையாகவே இருந்தான்.

மரத்தடியில் வந்து நின்றவனை உற்றுப் பார்த்த பாலன் புன்னகை புரிந்தவாறே ''நீ மகுடபதி தானே. நாம் இருக்கும் குருகுலத்தில் ஒன்றாகப் படித்தோமே. என்னை நினைவில்லையா?'' என்று கேட்டான். அழுக்கு வேட்டியும், கிழிந்த மேல் துண்டுமாயும் உள்ள பாலனைப் பார்த்து மகுடபதி முகம் சுளித்து ''யார் நீ? உயர் அதிகாரியான என்னோடு சமநிலை கொண்டாடுகிறாயா? நான் உன் நண்பனே அல்ல. நீ யாரென்று கூட எனக்குத் தெரியாது. என்னை உன் நண்பன் என்று சொல்லிக் கொள்ள உனக்கு என்ன துணிச்சல்?'' என்று பொர்ந்து தள்ளினான்.

அதைக் கேட்ட பாலன் திகைத்து ''நீ என் நண்பனாக முன்பு இருந்ததால் அவ்வாறு கூறினேன்,'' எனவே, மகுடபதியும் ''அழுக்கு வேட்டியும் கிழிசல் துண்டும் கொண்டுள்ள நீயா என் நண்பன்? என்னோடு நட்பு கொள்ள தகுதியும் அந்தஸ்தும் இருக்கிறதா உனக்கு?'' எனப் பகட்டான தன் ஆடைகளைத் தடவியவாறே கேட்டான்.

பாலனும் ''நீ இந்த ஆடைகளைக்

- சிவனார் செல்வன் -



மகுடபதி வேகவேகமாக ஓட்டமும் நடையுமாகச் சென்றுவிட்டான்.

வீட்டை அடைந்த மகுடபதி செருப்புகளைத் தூக்கிப் போட்டு விட்டுப் புதிய செருப்புகளை அணிந்துகொண்டு அரச சபைக்குச் சென்றான். அப்போது அங்கிருந்த ராஜேந்திரன் மகுடபதியைப் பார்த்து ''நண்பா! இன்று ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

ராஜேந்திரனும் மகுடபதியுடனும் பாலனுடனும் சேர்ந்து ஒன்றாகக் குரு குலத்தில் படித்தவனே. ராஜேந்திரன் பணக்காரப் பிரபுவின் மகன். குருகுல வாசத்திற்குப் பின் அயல்நாடுகளுக் குப் போய் மேலும் படித்துவிட்டு வந்து அரச சபையில் மிக உயர் பதவி யைப் பெற்றான். மகுடபதி அவன் கீழ் வேலை செய்யும் அதிகாரி. அப் படி இருந்தும் ராஜேந்திரன் அதிகார மிடுக்கு காட்டாமல் மகுடபதியுடன் நண்பனாகவே பழகி வந்தான்.

மகுடபதியும் ''கவலைதான். அது கிடக்கட்டும் இன்று நீ ஏன் இவ் வளவு மகிழ்ச்சியுடன் இருக்கிறாய்?'' என்று கேட்டான். ராஜேந்திரனும், ''இன்று நான் கூறிய யோசனையை மன்னர் பாராட்டியதோடு அதை ஏற் றுக் கொண்டும்விட்டார். அதனால் அவரிடம் நம் குருகுல நண்பனான பாலனுக்கு அரச சபையில் உயர் உத்தியோகம் கொடுக்கும்படி வேண் டினேன். அதையும் அவர் ஏற்றுக் கொண்டு அவனை வேலைக்கு நிய மித்துவிட்டார்,'' என்றான்.

அதைக் கேட்டு மகுடபதி திடுக்

களைந்து போட்டுவிட்டால் நீயும் என்னை போல சாதாரண மனிதன் தானே? இப்போது ஏதோ கிடைத்து விட்டது என்று போட்டுக் கொண்டு அலைகிறாய். குருகுலத்தில் நீ எப்படி இருந்தாய் என்பதை நினைத்துப் பார்!'' என்ற கூறினான்.

மகுடபதிக்குக் கோபம் வரவே காலை இழுத்து இழுத்து வேகமாக அங்கிருந்து சென்றான். அப்போது ஒருகால் செருப்பு அறுந்துவிட்டது. அதை அவன் கையில் எடுத்துக் கொண்டு செல்லவே, அதைக் கண்ட பாலன் நகைத்து ''இதுவரை செருப்பு உன்னைச் சுமந்தது. இப்போது நீ செருப்பைச் சுமக்கிறாய் இதைத்தான் காலம், விதி என்று சொல்கிறார்கள். தெரிந்ததா?'' என்றான். அவன் சொல் வதை எல்லாம் கேட்க விரும்பாமல்

கிட்டுப் போனான். பிறகு சமாளித்துக் கொண்டு "பாலனுக்கா சிபாரிசு செய்தாய்? அவன் மண்டைக் கர்வம் பிடித்தவனாயிற்றே. அவனால் உன் பெயர் கெடப் போகிறது," என்றான்.

ராஜேந்திரனோ, "பாலன் ஒன்றும் கர்வம் பிடித்தவன் அல்ல. மட்டு மரியாதை தெரிந்தவன். குருகுலத் திலேயே இப்படி பெயர் பெற்றதை நீ மறந்துவிட்டாயா?" என்று கேட் டான். அப்போது மகுடபதி "நீ அண் மையில் அவனைப் பார்க்கவில்லை போலிருக்கிறது. அதனால்தான் இப் படிக் கூறுகிறாய்," என்றான்.

ராஜேந்திரனும் "மூன்று நாட் களுக்குமுன் அவனை நான் ஒரு மரத்தடியில் பார்த்தேன். அவன் என்னை அடையாளம் கண்டு கொண்டு என்னைக் கண்டு பேசி மகிழ்ந்து என்னைப் பாராட்டினான். அவன்தான் சற்று வசதியாக வாழ முடியாத நிலையில் இருப்பதாகக் கூறி வருத்தப்பட்டான். அழுக்கு வேட்டியும் கிழிந்த துண்டும் கொண்ட அவனும் நமக்குச் சமமாக அரச சபையில் இருக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். அவனாக என் உதவியைக் கேட்காதபோதிலும் நானே மன்னரிடம் கூறி அவனுக்கு உயர் பதவியை வாங்கிக் கொடுத் தேன். அவனும் எனக்கு நல்ல பெயரை வாங்கிக் கொடுப்பான் என்ற நம்பிக்கை எனக்கு இருக் கிறது," என்றான்.

இதைக் கேட்ட மகுடபதி பல் லைக் கடித்துக் கொண்டு பேசாமல்



இருந்தான். அன்று மாலையில் அவன் பாலனைத் தேடிக் கொண்டு போய் அவனைக் கண்டு ''என்ன நீ என்னைப் புகழாமல் அந்த ராஜேந் திரனை வெகுவாகப் புகழ்ந்து வேலையை வாங்கிக் கொண்டாயே? ராஜேந்திரனைப் போல மோசக் காரனை எங்கும் பார்க்க முடியாது. அவனைப் பற்றி எனக்கு நன்கு தெரியும்,'' என்றான் ஆத்திரதைக் கொட் டியவாறே. பாலன் அவன் சொன் னதை அமைதியாகக் கேட்டுக் கொண்டான்.

பிறகு அவன் ''நான் ராஜேந்திர னைக் கண்டதும் 'நண்பா' எனக் கூறினேன். பதிலுக்கு அவனும் என்னை நண்பா என அழைத்தான். அதனால் மகிழ்ந்து அவனைப் பாராட்டினேன். நீ என்னை மதிக்க வில்லை. உன் நண்பனாக இருக்க எனக்குத் தகுதியும் அந்தஸ்தும் இல்லை எனக் கூறி இகழ்ந்தாய். இது வரை எனக்கு அரச சபையில் வேலை கிடைக்கப் போகிறது என்பது தெரி யாது. நீ சொன்ன பிறகுதான் எனக்கு ராஜேந்திரனின் சிபாரிசால் வேலை கிடைக்கிறது என்பதும் தெரிந்தது. எனது நிலையைக் கண்டு பரி தாபப்பட்டு அவன் தானாகவே வந்து உதவி செய்திருக்கிறான். அப்படிப் பட்டவனை மோசக்காரன் என்று சொல்பவனை என்ன என்று சொல் வது என்பது எனக்குத் தெரிய வில்லை,'' என்றான்.

இதே சமயம் அங்கு வந்த ராஜேந்திரனும் ''நீங்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்ததை நானும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். பாலனுக்கு வேலை கிடைத்தால் மகுடபதி மகிழ்ச்சி அடைந்திருப் பான் என நினைத்தேன். ஆனால் அவன் பேசியதைக் கேட்டு மகுடபதி இவ்வளவு மட்டமானவனா என்றே எண்ணத் தோன்றிவிட்டது. இது அவன் வெட்கப்பட வேண்டிய விஷ யம். இப்படியே இவன் நடந்து கொண்டால் இவனது எதிர்காலம் கேள்விக் குறியாகிவிடும்,'' என்றான்.

மகுடபதிக்கு அது சாட்டை அடி போலாயிற்று. அவன் அப்போதே தன் போக்கை மாற்றிக் கொண்டு நல்லவனாகிவிட்டான்.



# உண்மைக்காக...

அந்த ஆரம்பப் பள்ளியில் சிறுவர்கள் கூச்சல்போட்டுக் குதித்துக் கொண்டிருந் தார்கள். வகுப்பறையில் ஆசிரியர் அடி எடுத்து வைத்ததும் வேர்க்கடலைத் தோல்களாகச் சிதறிக் கிடப்பதைக் கண்டார். உடனே அவர் ''என்ன இது? யார் இப்படிக் குப்பை போட்டது? வேர்க்கடலை தின்ற பையன்கள் இவற் றைப் பொறுக்கி எடுத்து வெளியே எறிய வேண்டும்,'' என்று அதட்டினார்.

ஒரு சிறுவனைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் குப்பையை எடுத்து வெளியே போட்டார்கள். அதைக் கண்டு ஆசிரியர் அச்சிறுவனிடம் ''உனக்குத் தனியாக வேறு சொல்ல வேண்டுமா?'' என்று குத்தலாக்க கேட்டார். அவன் எழுந்து நின்று'' நான் வேர்க்கடலை தின்னவும் இல்லை. அவற்றின் தோல் களை எறியவும் இல்லை. அதனால் எதையும் எடுத்து எறிய வேண்டியது இல்லை,'' என்றான்.

அப்போது ஆசிரியர் ''அப்படியா னால் இவர்கள் நீயும் தின்றதாகச் சொல்கிறார்களே. அது பொய், நீ சொல்வதுதான் உண்மை. இதுதான் நீ கூறுவதா?'' என்று கேட்டார். அவனும் ''ஆமாம். நான் சொல்வதே உண்மை,'' என உறுதியாக்க கூறினான். ஆசிரியர் பிரம்பை எடுத்துக் கொண்டு அவனைக் கையை நீட்டச் சொல்லி உள்ளங்கையில் நான்கு அடிகள் பலமாகக் கொடுத்தார். அவன் அவற்றைத் தாங்கிக் கொண்டு புத்தகங்களை எடுத்துக் கொண்டு வகுப் பறையைவிட்டு வெளியே சென்றான்.

அன்று மாலை ஆசிரியர் அந்தச் சிறுவனின் வீட்டிற்குச் சென்றார். அவனது தந்தையிடம் வகுப்பறையில் நடந்ததைக் கூறி அவனைக் கட்டுப் பாட்டில் வைக்க வேண்டும் என்று அறிவுரை கூறினார். அதைக் கேட்டபின் அச்சிறுவனின் தந்தை ''அவன் வேர்க் கடலை தின்னவில்லை எள்று கூறினால் அது உண்மை தான். ஏனெனில் அவன் பொய் பேச மாட்டான்,'' என்றார்.

உண்மைக்கும் உரிமைக்கும் போரா டியவனுக்கு மன உறுதியும் தன்னம்பிக் கையும் இருக்க வேண்டும். சிறு வய திலேயே இவற்றைக் கொண்டிருந்தவர், சுயராஜ்ஜியம் எனது பிறப்புரிமை என்றும் அதனை அடைந்தே தீர்வேன் என்றும் முழக்கமிட்ட லோகமானிய பால கங்காதர திலகர் தான்.



4

# சூர்யா

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

தனக்கு எதிரான சதியை அறிந்த சாந்திபுர மன்னன் கைக்குழந்தையுடன் தன் மனைவியை ரகசிய சுரங்கப்பாதை வழியில் தப்ப வைத்தான். பிறகு அவன் சதிகாரர்களுடன் போரிட்டு அரண்மனை மேல்தளத்தில் இருந்து கீழே ஓடும் நதியில் குதித்தான். ராணி சுரங்கப்பாதையில் வெளியே வந்ததும் மயங்கி விழுந்தாள். வழியில் தவழ்ந்த கைக்குழந்தையைக் கண்ட ஜெயானந்த முனிவர் அதனை எடுத்துச் சென்றார்.

ஓவியம் : காந்தி அய்யா

ஜெயானந்தர் அக்குழந்தையின் பெற்றோர்களை எங்கே தேடுவது என்று எண்ணியபோது அவரது சீடன் முகுந்தன் அங்கு வந்தான்.

குருவே! யாரோ ஒரு பெண் நதிக்கரையில் நினைவிழந்து கிடக்கிறாள்

அவள் இதன் தாயாகத்தான் இருக்கும். வா, போய்ப் பார்க்கலாம்.

அதோ, அங்கே கிடக்கிறாள்!

போய் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா. என் கமண்டலத்தை எடுத்துச் செல்.

முகுந்தன் போய் தண்ணீர் கொண்டு வந்து அவளது முகத்தில் தெளித்தான்.

விரைவில் இவளது மயக்கம் தெளிந்து விடும்

அந்தப் பெண்மணி கண் திறந்து தன் குழந்தையைக் கண்டு மெதுவாகச் சிரித்தாள்.

யாரம்மா, நீ?


அம்மா!
இந்த துப்பட்டி மீது தலையை வைத்துப் படுத்துக் கொள்!


மகாத்மா! என்னிடம் கனிவுடன் பேசினீர்கள். என்னைத் தங்களது மகளாகவே கருதுங்கள்!


இவனை வளர்க்கும் பொறுப்பு தங்களுடையது. நான் அதிக நேரம் உயிர் வாழ மாட்டேன்.


முனிவர் அவளுக்குப் பதில் சொல்வதற்குள் அவள் தன் குழந்தையை ஒருமுறை பார்த்து விட்டுக் கண்ணை மூடிவிட்டாள்.
குருவே! இவள் இறந்து விட்டாள்!
ஆமாம், முகுந்தா! இறந்துதான் போய்விட்டாள்.




ஜெயானந்தர் நீர்வீழ்ச்சியில் குளித்துவிட்டு தியானத்தில் அமர்ந்தார். அப்போது அவருக்கு ஒரு பெண்மணி தென்பட்டாள்.



நான் சாந்திபுரத்து ராணி சாந்தகுமாரி.

முனிவர் தியானத்தை முடித்து முகுந்தனிடம் சென்றார். இதற்குள் அவருடைய இன்னொரு சீடன் அங்கு வந்தான்.









முகுந்தா! உன் ஊகம் சரியே. இவர்கள் அங்கிருந்து எப்படித் தப்பி வந்தார்கள் என்பது தெரியவில்லையே. மகாராணி இறக்குமுன் தன் குழந்தை தன் உயிரற்ற உடல் மீது ஒரு வெள்ளை மலரை வைக்க வேண்டும் என்ற விருப்பத்தைத் தெரிவித்தாள்.

குருவே! மகாராஜா அரண்மனையை ஒட்டி ஓடும் ஆற்றில் குதித்துவிட்டதாகச் சிலர் கூறுகிறார்கள். வேறு சிலரோ சேனாதிபதி அவரைக் கொன்று விட்டதாகச் சொல்கிறார்கள்.

இளவரசனின் நன்மைக்காக அரச குடும்பம் பற்றிய இச்செய்திகள் நம் மூவருக்கு மட்டுமே தெரிந்ததாக இருக்கட்டும். மன்னர் தப்பித்திருக்கலாம். என்ன நடந்தது என்று யாருக்குத் தெரியும்?

குருவே! மகாராணியின் உடலை அடக்கம் செய்து விடலாமா?

நாளை செய்யலாம். இன்றிரவு இந்த உடலைக் காவல் காத்துக் கொண்டிருக்கும்படி நம்மவர்களிடம் சொல்கிறேன்.

தொடரும்

## ஒரே கோடு சித்திரம்

மகேஷ் ஒரு புறாவைப் பறக்கவிடுவதாகப் படத்தில் காட்டப்பட்டிருக்கிறது. இதையே வரைந்து காட்ட முடியுமா? இது கையை எடுக்காமல் ஒரே கோட்டில் வரையப்பட வேண்டும். முயன்று பாருங்கள்!

I



## வழி காட்டுங்கள்!

குருவி சிக்கி தன் குஞ்சு காத்துக் கொண்டிருப்பது கண்டு அதை அடையத் துடிக்கிறது. அதற்கு வழிதெரியவில்லை. அதனால் நீங்கள் அதற்கு வழி காட்டுங்கள்.

II

# வித்தியாசங்கள் என்ன?

பக்கத்திலுள்ள இரு படங்களும் ஒன்றுபோலத் தென்பட்டாலும் அவை ஆறு விதங்களில் மாறுபடுகின்றன. அவற்றைக் கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்.





*(விடைகள் 94ம் பக்கத்தில்)*

# வண்ணங்களைக் கொடுங்கள்

தாய் வாத்தும் அதன் குஞ்சும் தொப்பிகள் அணிந்து கொண்டு கடை வீதிக்குப் புறப்பட்டுவிட்டன. இப்படத்திற்கு வண்ணங்கள் தீட்டி அழகு படுத்துங்கள்.

III

IV

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



SOURAA



SOURAA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/–
போட்டி முடிவு ஜனவரி 2004 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

செப்டம்பர் 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி வெற்றவர் :

B. மேகலா
25, கே.ஆர்.ராமசாமி நகர்
வேளச்சேரி மெயின் ரோடு
சென்னை - 600 042.

பரிசு பெற்றவை





பழகிய வாசனையுடன் உரையாடல்
பழ வாசனையுடன் உரையாடல்

கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 92-93)

## வித்தியாசங்கள் என்ன?

1. குதிரையின் வலது காது இல்லை, 2. குதிரை உடலின் புள்ளிகள், 3. குதிரையின் பின்புற வலது கால், 4. வண்டி மீதுள்ள கோடுகள், 5. வண்டிச் சக்கரத்தின் ஓர் ஆரக்கால் இல்லை.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

